சித்தர்கள் கண்ட

# தமிழ் முறை எண் கணிதம்



அனுப்பபட்டி

ப. சு. மணியன்

# சித்தர்கள் கண்ட தமிழ் முறை எண்கணிதம்


ஆசிரியர்

அனுப்பபட்டி ப. சு. மணியன்









ஸ்ரீ வித்யா பப்ளிகேஷன்ஸ்

10/1, லட்சுமி தெரு, மேற்கு மாம்பலம்,
சென்னை-600 033

| | | |
|---|---|---|
| Title of the book | : | Sidhargal Kanda Tamil Murai Ennkanitham |
| Subject | : | Astrology |
| Language | : | Tamil |
| Date of Publication | : | Second Edition Oct. 86 |
| Author | : | Pa. Su. Maniyan |
| Copyright Holder | : | Author |
| Paper used | : | 10. 9 Kg. Printing |
| Size of the Book | : | 18. 5 X 12. 5 Cms |
| Printing Points used | : | 10 Points |
| No. of Pages | : | 128 |
| No. of Copies Printed | : | 1000 Copies |
| Binding | : | Hand Book Binding |
| Publisher | : | Sri. Vidhya Publications<br>10/1, Lakshmi St,,<br>West Mambalam<br>Madras-600033 |
| Printer | : | Visalam Printing House<br>Madras-24 |
| Price | : | Rs. 9-00 |

'கலைமகள்' ஆசிரியர்

'வாகீச கலாநிதி'—டாக்டர் கி. வா. ஜகந்நாதன்

அவர்களின்

# மதிப்புரை

அன்பர் திரு. ப. சு. மணியன் அவர்கள் எழுதிய 'தமிழ் முறை எண் கணிதம்' என்னும் நூலைப் படித்துப் பார்த்தேன். இந்த நூலில் ஆசிரியர் தமிழ் முறை எண் கணிதத்தின் பழமையையும், சிறப்பையும் எடுத்துக்காட்டுகளோடு தெளிவாக விளக்கியிருக்கிறார். இந்த நூலில் சித்தர்களுடைய தத்துவத்தையும் புலப்படுத்தியுள்ளார். ஐம்பூதக் கொள்கை, பஞ்சீகரணமும் பிரபஞ்ச இயலும், இன்ன என்பதைப் பல பெரியோர்களின் வாழ்க்கை முறையின் மூலம் தெளிவுபடுத்தியிருக்கிறார். இலிங்கபுராணம், சாதக அலங்காரம், சூரிய சித்தாந்தம், கண்ணுசாமியம் ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள்களைக் காட்டியிருக்கிறார். மகாத்மா காந்தி ஆகாயபூதத்தின் அம்சத்தைப் பெற்றதனால் உலகம் முழுவதும் அவருடைய புகழ் பரவியதை எடுத்துக் காட்டுகிறார். ஜவஹர்லால் நேரு என்ற திருநாமம் ஆகாயபூதத்தில் அமைந்ததனால் இந்தத் திருநாமம் குழந்தைகள் முதல் எல்லா நாட்டு மக்கள் வரையிலும் அவர்களுடைய உள்ளங்களில் பதிந்துள்ளது என்று உதாரணம் காட்டுகிறார்.

இவ்வாறு வேறு பல பெரியோர்களுக்கு எவ்வாறு பஞ்சபூதங்களில் ஏதேனும் ஒரு பூதத்தின் தொடர்பினால் புகழ் பெற்று விளங்கினார்கள் என்பதையும் விளக்கியிருக்கிறார். பல கணக்குகளைப் போட்டுக் காட்டியிருக்கிறார். நுட்பமான ஆராய்ச்சியை இந்த நூலில் நாம் காண்கிறோம். இந்த நூலைப் படிக்கிறவர்கள் பல அருமையான கருத்துக்களை தெரிந்து கொள்வார்கள் என்பது திண்ணம்.

சென்னை
27—9—86

அன்பன்,
கி. வா. ஜகந்நாதன்

ஏ. ஆர். சுப்ரமண்யன்
துணை வளர்ச்சி அதிகாரி
ரிசர்வ் வங்கி, (டி.ஐ.ஸி.ஜி. ஸி.)
குறளகம், சென்னை-108

## "வாழ்வை உயர்த்த வந்த நூல் இது."

நாம் வாழும் இந்த நாடு ஒரு ஆன்மீக பூமி. இங்கே மூன்று காலங்களையும் உணர்ந்த சித்தர்கள் பலர் இருந்தனர், தற்போதும் உள்ளனர். சித்துக்களைச் செய்ததால் மட்டுமே அவர்கள் சித்தர்கள் என்றழைக்கப்படவில்லை. எல்லாவகை மனிதர்களிடமும் கருணை கொண்டு கருமப் பிணியை (வினைகள்) நீக்கவும், சருமப் பிணியைப் போக்கவும் பலவிதமாய்ப் பாடுபட்டதாலேயே அவர்கள் சித்தர்கள் ஆனார்கள்.

ஐம்பூதச் சேர்க்கையினால் அமைந்த இந்த உடம்பின் சேஷ்டைகளை, ஆசைத் தவிப்புக்களை அடக்கியவர்கள் அவர்கள். அதனால் ஐம்பூதத்தின் இழுப்புச் சக்தியைத் தமது கைக்குள் அடக்கி, உலகெங்கும் ஒரே கணத்தில் உலவும் சக்தி பெற்றிருந்தனர்.

முற் பிறவியை உணர்ந்து, அடுத்த பிறவியை அறிந்து இரண்டுக்கும் நடுவில் நின்று வழி காட்டினார்கள் அவர்கள். தம் உடம்பை வென்று, ஸ்தூல, சூக்கும உருவில் எல்லாம் மக்களோடு மக்களாக வாழ்ந்து, பலருக்கும் எண் கணிதம், மூலிகை வைத்தியம், சித்த தத்துவம் போன்றவற்றை உரிய முறையில் ரகசியமாய்க் கற்பித்தவர்கள் அவர்கள். இப்படி ரகசியமாய்ச் சொன்னதாலேயே அந்த உயர்ந்த கலை

களுக்கு தெய்வீக வடிவையும், சத்திய தரிசனத்தையும் 'அருள் சக்தி'யாக வழங்கினார்கள். அதனாலேயே பல ஆன்மீகவாதிகளையும் சித்த தத்துவத்தில் ஒன்றுமாறு ஆசை கொள்ள, (சாதனையால் முயற்சி செய்ய) வைத்தவர்கள் இச் சித்தர்கள்.

இதனாலன்றோ மகாகவி பாரதியாரும் சித்த தத்துவத்தில் ஈடுபட்டு,

எனக்கு முன்னே சித்தர் பலர் இருந்தாரப்பா !
யானும் வந்தேன் ஒரு சித்தன் இந்த நாட்டில்!'' என்று

களிவெறியுடன் பாடுகின்றார் !

பல ஞானிகள் உலக வாழ்வை அலட்சியப்படுத்தி வாழ்ந்தார்கள். ஆனால் சித்தர்கள் அப்படி அல்லர். ஆத்மா உடல் மூலம் தான் செயல்படுவதால், ஆத்ம ஞானத்தை உடலையும் உள்ளத்தையும் ஒழுங்குபடுத்துவதன் மூலம், யோக சாதனை மூலம் உணர முடியும் என்று பல பாடல்களால் அனுபவித்துச் சொன்னார்கள்.

''மாங்காய்ப் பாலுண்டு மலைமேல் இருப்போர்க்கு;
தேங்காய்ப் பால் ஏதுக்கடி?—குதம்பாய்
தேங்காய்ப் பால் ஏதுக்கடி?''

என்று குதம்பைச் சித்தர் பாடினார். இதன் உண்மைப் பொருள், ''உலக ஆசா பாசங்களைக் கடந்து இறைநிலையில் உன் மனத்தை வைத்து விட்டால் உலகத் துன்பங்கள் உன்னைத் துன்புறுத்த மாட்டா'' என்பதாகும்.

இந்த எண் கணித நூலிலும், நூலாசிரியர் மணியன் அவர்கள் இவ்வகைப்பட்ட பல சித்தர்களின் நிலையை முதலில் எடுத்துக் காட்டுகிறார். பஞ்ச பூதத் தத்துவத்தைக் கடைப் பிடித்தே தமிழ்ச் சித்தர்கள் எப்படி எண் கணிதத்தை எளிமையாக வகுத்தார்கள்; எப்படி 'ஐந்து' என்ற எண்

91/4



மூலமே சுருக்கமாக உயிரெழுத்து, மெய்யெழுத்துக்கள் அமைந்த 'பெயர்களுக்கு' சோதிடம் சொன்னார்கள்; வருங் காலப் பலன்களை அற்புதமாக, துல்லியமாக விவரித்தார் கள்; அப்படி அறிவதன் மூலம் எப்படி மக்கள் தத்தம் வாழ்க் கையினை செம்மைப்படுத்தி, திருத்திக் கொண்டு உயர்ந்த முறையில் வாழலாம்; இறைவனை அடையலாம் என்றெல் லாம் தெளிவாக, எளிய நடையில் விவரிக்கிறார் ஆசிரியர்.

சித்தர்களின் நடையைப் புரிந்து கொண்டு, நமக்கும் தெளிவாக, அக்கறையுடன் வாழ்வுப் பிரச்னைகள் பற்றி இவர் எடுத்துச் சொல்வதாலேயே, இவரும் சித்தர் பரம் பரையிலே வந்தவர் என்ற மாபெரும் உண்மை நமக்குப் புலனாகிறது; அதனால் நூலில் ஒவ்வொரு எழுத்துக்கும் சக்தி மிகுந்து காணப்படுகிறது.

ஆம், 'அழுகணிச் சித்தர்' சொன்னார்.

''மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்
காமன் கணை எனக்குக் கனலாக வேகுதடி !
மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்,
காமன் கணைகளெல்லாம் என் கண்ணம்மா !
கண் விழிக்க வேகாதோ?''—என்றார்.

இப்பாடல் ஏதோ விரசமாக, நகைச்சுவை படச் சொல்வது போல் இருந்தாலும் இதன் உண்மைப் பொருள் வேறு.

இதில் காமம் தன்னை வெற்றி கொள்வது எவ்வாறு என்பதை மிக எளிமையாக, வேடிக்கை செய்வது போல விளக்கி விடுகிறார் சித்தர். ஒரு பெண்ணைப் பார்த்ததும் உனது மனம் காமமுற்றால் உடனே அவளை அம்பாளாக நினைத்து விடு. மறு கணமே உன் உள்ளம் சுத்தமாகி விடும் பார்!'' என்று அழகாக இப்பாட்டிலே சித்தரிக்கிறார் சித்தர்.

இப்பேர்ப்பட்ட சித்தர்களின் தத்துவங்களும் பஞ்சபூதக் கொள்கைகளும் இந்த உலகத்தை, உலகத்தின் உயிர்களை எப்படி எல்லாம் இயக்கி வருகிறது என்பதை நூலாசிரியர் அற்புதமாய் விளக்கி விடுகிறார்.

இது தவிர 'மனிதன் என்பவன் யார்?', பஞ்சபூத இயக்கு விதிகள், தேகத்தின் நுட்பம், என்பது பற்றியும் தமிழ் எழுத்துக்களை எவ்வாறு ஐந்தின் சூட்சுமமாகப் பிரித்து எண் கணிதம் (நியூமராலஜி) அடிப்படையில் பலா பலன்களைச் சொல்லலாம் என்பது பற்றியும் அங்கை நெல்லிக் கனி என விளக்குகிறார் இந்த நூலிலே.

இதற்கெல்லாம் ஆதாரமாய் வராகமிகிரரும், சூரிய சித்தாந்தமும், ரோமரிஷியின் பட்சி சாத்திரமும் அவருக்கு அதிசயமான முறையில் நன்கு கை கொடுக்கின்றன.

பிறகு, முக்கியப் பகுதியான ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து ஆகிய எண்களை அடிப்படை எண்களாக அமையப் பெற்றவர்கள் (அதாவது இந்த நூலின் பிரகாரம் பேர் ராசி எண்களாகக் கொண்டவர்கள்) என்னென்ன தொழில்களை, வேலைகளை மேற்கொண்டால் வெற்றி பெறுவர்; இவர்களின் இலட்சியம், குணநலன்கள் என்னென்ன என்பதை விரிவாக விளக்குகிறார் ஆசிரியர். இது மட்டுமா? ஒவ்வொருவருக்கும் உரிய பரிகாரங்கள் என்னென்ன, அணியவேண்டிய மோதிரங்கள் என்ன என்பதையும் கருணை மனத்தோடு சொல்கிறார்.

ஆகவே ஒவ்வொரு தமிழ் மகனும் நமக்கே உரிய இந்த சித்தர் நூலை வாங்கிப் படித்து வாழ்வில் முன்னேற வேண்டும். நல்ல பயன்களெல்லாம் 'பராசக்தி' அருளால் அடைய வேண்டும் என்பதே நம் ஆசை.

# தமிழ்முறை எண் கணிதம் முதல் பதிப்பைப் பற்றி வாசகரின் கருத்துக்கள்.

தமிழ்முறை எண்கணிதம் வெளிவந்த ஆறு மாதங்களில் 600 நபர்களுக்கு மேல் எனக்கு கடிதங்கள் எழுதி இருந்தார்கள். அதில் பெரும்பாலும் பாராட்டுக் கடிதங்கள், சில சந்தேகம் கேட்டுக் கடிதங்கள், சிலர் இன்னும் விரிவாக விளக்கி எழுதவேண்டும் என்னும் கோரிக்கைகளை எழுதி இருந்தார்கள். அதில் பலர் தாங்கள், தமிழுக்கு செய்த நல்ல தொண்டு என்றும் பாராட்டியதோடு அல்லாமல் இது சாதாரண மக்களுக்குப் புரியாத புதிர் என்றும் தாங்களே வருத்தப்பட்டார்கள். அத்தனைப் பேரின் கடிதத்தைப் பிரசுரிக்க இயலாவிட்டாலும் அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

அந்தக் கடிதங்களில் தலையாயது 4-4-1982ல் திண்டுக்கல் புலவர் ம. பொன்மாறன் பி.லிட்., அவர்கள் இந்தச் சிறிய நூலை பலவகையாக படித்தும் தொகுத்தும் திறனாய்வு செய்து அதில் உள்ள நல்ல அம்சங்களையும், அதில் ஏற்பட்ட ஐயங்களையும் விமர்சித்து பக்கம் பக்கமாக எழுதி இருந்தார்கள். அந்தத் திறனாய்வு சுமார் 10 பக்கங்கள் வரும். அதைப் பிரசுரித்து அந்தச் சந்தேகங்களுக்கு எடுத்துக்காட்டும் விளக்கமும் எழுதப் புகுந்தால் இதற்காக சுமார் 48 பக்கங்கள் ஒதுக்க வேண்டிவரும். காகித விலை உயர்வு—அச்சுக்கூலி இவைகளைப் பார்த்து பதிப்பகத்தார்க்கு நாம் செலவு வைக்கக் கூடாது என்ற எண்ணத்தினால் அவர்களுக்கு நன்றி கூறும் முகத்தான் அவரது கருத்துக்களை கூறவேண்டியவனாக இருக்கிறேன்.

புலவர் பொன்மாறன் அவர்கள் குறிப்பிட்டார்கள்: ''மக்கள்தான் உண்மையான நடுவர்கள். அவர்கள்தான் நூலின் தன்மையை உலகுக்கு உணர்த்தக் கூடியவர்கள்'' என்று. மக்கள் முன் 4000 பதிப்புக்கள் விற்பனையாகி— புத்தகம் விற்பனைக்கு வேண்டுமென புத்தக விற்பனையாளர் களும், புத்தகவேண்டுமென்று பலருடைய கடிதங்களும் வந்துகொண்டிருக்கின்றன. மக்கள் இக்கலையை ஏற்றுக் கொண்டு வரவேற்கிறார்கள் என்பதே இதன் பொருள்.

புலவர் பொன்மாறன் அவர்கள் இறுதியாகக் கூறிப் பிட்டார்கள்: ''பஞ்ச பூதங்களின் தன்மையை சில தலைவர் களோடும், சான்றோர்களுடனும் தெய்வங்களின், பொருள் களின், ஊர்களின் தன்மைகளுடனும் பொருத்திக் காட்டிச் சான்றாக்கியது சிறப்பு அம்சம். நானும் பல நிலைகளில் அவற்றின் தன்மைகளை உங்கள் வழிப்படி ஆராய்ந்து பார்த்தேன், பொருத்தமாக அமைந்துள்ளன. போற்றத் தக்கன'' என்று அவர் முழுமையாக ஒத்துக்கொண்டார்.

அடுத்து 14-11-1982ல் பாலஜோதிடம், எண்கணிதம் ஆகிய பத்திரிகையின் ஆசிரியர் வித்வான் வே. லட்சுமணன் அவர்கள் தனது எண்கள் பத்திரிகையில் இத் தமிழ்முறை எண் கணிதத்தை வரவேற்று பாராட்டியுள்ளார்கள்.

அவர் பாராட்டியதாவது: 'நிலம், நீர், தீ, காற்று, வானம் என்பவை 5 பூதங்கள். அ. இ உ. எ. ஒ. ஆகிய உயிர்க்குறில்கள் ஐந்தும் மூல எழுத்துக்கள். தமிழில் உயி ரெழுத்து 12. மெய்யெழுத்து 18 உயிர்மெய்எழுத்துக்கள் 216. ஆயுத எழுத்து 1. ஆக மொத்தம் 247 எழுத்துக்கள் அல்லவா! இவை அனைத்தையும் உயிர்க்குற்றெழுத்துக் களான மேற் சொன்ன 5க்குள் அடக்கி ஒரு எண்கணித முறையே வழங்கியுள்ளார் மதிப்பிற்குரிய திரு. அனுப்ப பட்டி ப. சு. மணியன் அவர்கள். சித்தர்களின் ஐம்பூதக் கொள்கையே இம்முறைக்கு அடிப்படை என்றும் தெரிவித் துள்ளார்.

'எண்கள்' பத்திரிகை ஆங்கில எழுத்துக்களையும், ஆங்கிலத் தேதி, மாதம், ஆண்டு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது என்றாலும் 'தமிழ்முறை' என்று ஓர் ஆராய்ச்சியாளர் தந்துள்ள கணிப்பு முறையை பாராட்டுவதோடு, அந்த முறையையும் எல்லோருக்கும் அறிவிக்கும் ஆர்வத்தையும் பெற்றுள்ளது'' என்று தனது பத்திரிகையில் எழுதி 'தமிழ்முறைப்படி தமிழக முதல்வரின் எண் 1' என்றும்' 'மக்கள் திலகத்தின் சிறப்புக்கு சித்தர் முறையில் விளக்கம்' என்றும் சித்தர்கண்ட தமிழ்முறை எண் கணிதத்தின் ஆசிரியர் அனுப்பபட்டி ப. சு. மணியன் பின்வருமாறு எழுதுகிறார். கூறுகிறார் என்று பலமுறை தனது எண்கள் பத்திரிகையில் தொடர்ந்து மூன்று இதழ்களில் எழுதி இறுதியாக' இப்படிப்பட்ட சிறப்புக்களையும், சிறப்பை பிரதிபலிக்கும் எழுத்துக்களின் சாத்திரத்தையும், அந்த எழுத்துக்குரிய எண் சாத்திரத்தையும் படைத்த மேதைகளின் தீர்க்கதரிசனத்தையும் வருணிக்க வார்த்தைகள் உண்டா. என்ன! என்று' எழுதி முடித்தார். தமிழ்முறை எண்கணித மூலம் தமிழக முதல்வருக்த நல்ல உயரிய பலனை சித்தரித்துக் காட்டினார்.

அடுத்து திருச்சியில் இருந்து வெளிவரும் ஜோதிடக் கடல் ஆசிரியர் திரு. வைத்தியநாதன் அவர்கள் தனது பத்திரிகையில் தமிழ் முறை எண்கணிதத்தை தொடர்கட்டுரையாக பல இதழ்களில் வெளியிட்டுச் சிறப்புச் செய்தார்கள்.

ஆகவே, இதுபோல பலருடைய பாராட்டுக்களை வெளியிட பல பக்கங்களை ஒதுக்கவேண்டி வரும்.

இத் தமிழ்முறை எண் கணிதத்தைப் படித்துப் பாராட்டி கடிதங்களை எழுதியவர்களுக்கும், திறனாய்வு செய்த புலவர். ம. பொன்மாறன் பி லிட்., அவர்களுக்கும், வித்வான் வே. லட்சுமணன், அவர்களுக்கும், சோதிடக்கடல் ஆசிரியர் அவர்களுக்தும், பொய்யாமொழி, மாதஜோதிடம், தினமணி, குமுதம் போன்ற பத்திரிகைகளுக்கும் நன்றிகூற கடமைப்பட்டிருக்கிறேன்.

இரண்டாம் பதிப்பை விரிவாக எழுதி அச்சிட எண்ணியிருந்தேன். வேலை அதிகமும்—போதிய நேரமில்லாமையாலும் காலம் நீண்டுக்கொண்டே வந்தது. புத்தகம் கேட்டு பலரும் கடிதம் எழுதியதன் காரணமாக—முதல் பதிப்பின் புத்தக அளவை மாற்றி ஒருசில பிழைகளைத் திருத்தி புத்தகத்தை கவர்ச்சிகரமாக வெளியிட முன்வந்த விஷ்ணு பிரேமியவர்களுக்கும் அவரது ஸ்ரீவித்யா பதிப்பகத்திற்கும் நன்றி கூறிக்கொள்கிறேன். மேலும் கீழ்கண்ட கேள்வியை கேட்பவர்களுக்கும் — பதிலைச்சொல்லி என்னை மீண்டும் இவ்வெண்கணிதத்தை விரிவுபடுத்த கேட்டுக் கொண்டவர்களுக்கும் மாறாத மறவாத நன்றி உள்ளவனாக இருப்பேன். 21-11-82 எண்கள் இதழில் கே. சிதம்பரம், மயிலாடுதுறை. கேள்வி: 247 தமிழ் எழுத்துக்களையும் அ,இ,உ,எ,ஒ என்ற ஐந்துபெரும் பிரிவுக்குள் அடக்கிவிடுகிறது சித்தர் எண்கணிதம். இந்த முறைப்படி உலகத்து மாந்தர் எல்லோருமே ஐம்பிரிவுக்குள் அடங்கிவிடுவார்களே! ஏராளமான வேறுபாடுகள் உடைய மனிதர்களை ஐந்தே வகையினராகச் சொல்லுவது பொருந்துமா? பதில்: ஐந்து தத்துவங்களின் அடிப்படையில் அந்த கணிதம் உருவாக்கப்பட்டிருக்கிறது. அஸ்திவாரம் பொருந்தவே செய்யும், மேலும் இதை இன்னும் விரிவுபடுத்தவும் வாய்ப்பிருக்கிறது. இக்கணிதத்தின் ஆசிரியர் இதைப்பற்றி சிந்திப்பார்; விரிவுபடுத்தவும் செய்வார் என்று எண்ணுகிறேன். எண்கள். 28-11-82 இதழ்.

ஆர். தங்கராசன், மதுரை: கேள்வி: "ஐம்பூதக் கொள்கையில் உருவான சித்தர் கணித முறையைப்பற்றி உங்கள் கருத்தென்ன?

பதில்: இந்த முறையானது இன்னும் விரிவுபடுத்தப் படவேண்டும்.

இதே இதழில் வித்வான் அவர்கள் மீண்டும் கூறுகிறார்கள்:—

''இதுவரை எண் சாத்திரத்தில் இன்னும் முழுமையான வளர்ச்சியை அடையாமலும் ஆனால் நீண்டு விரிந்து வளரும் அடிப்படைத் தகுதியுள்ளதுமான தமிழ் முறை சித்தர் கணிதப்படி மக்கள் திலகம் அவர்களின் எண் மகிமை பற்றி விளக்கினேன்'' என்று எழுதுகிறார். ஆகவே இதுபோல நான் மீண்டும் சுட்டிக்காட்டினால் தன்னை வியந்து தருக்கிய குற்றத்திற்கு ஆளாவேன்.

இவர்களது வேண்டுகோளை விரைவில் நிறைவேற்ற முயற்சிக்கிறேன் என்று உறுதி கூறிக்கொள்கிறேன்.

இங்ஙனம்,

அனுப்பபட்டி. ப. சு. மணியன்.

# பதிப்புரை

சித்தர்கள் கண்ட தமிழ்முறை எண் கணிதம் என்ற இந்நூல் நீலாப் பதிப்பகத்தின் சார்பில் முதல் நூலாக வெளியிடப் பெற்றிருந்தது.

தமிழ்நாட்டின் பலபகுதிகளிலிருந்தும் சித்தர் தத்துவங்களுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. பொதுமக்களின் நல் ஆதரவே, சில புதிய சேர்ப்புகளுடன், இரண்டாம் பதிப்பாக எங்களது ஞான குருவான பெரு மதிப்பிற்கும், மரியாதைக்கும் உரிய உயர்திரு ப. சு. மணியன் அவர்களின் நல்லாசியுடன் துவங்கப் பெற்ற ஸ்ரீ வித்யா பப்ளிகேஷன்ஸ் மூலம் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

எங்கள் குருநாதருடைய பேச்சு வன்மையாலும், எழுத்து வன்மையாலும், ஆன்மீகத்தில் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட வேண்டும். சித்தர் பெருமக்களின் பெருங்கருணையினால் அவர்களின் அரிய தத்துவங்களை பாமர மக்களும் புரிந்து, அவர்கள் காட்டிய வழியினை பின்பற்றி வாழ்வில் உயர்வடைய வேண்டும் என்பதற்காக மேற்கொண்ட சிறு முயற்சியில் இது முதல்படி.

ஆன்மீகத்தில் உயரிய நிலையில் இருக்கும் எங்கள் குருநாதரின் பெருங்கருணை எங்களுக்கு நல்வழிகாட்டி அனுக்கிரகம் செய்தார்கள். அவர் ஓர் ஞான தீபம். அஞ்ஞானமாகிற இருள் நீங்கி வாழ்வில் ஒளிவீச அவர்களின் தத்துவங்களை வெளியிடுவதில் பெருமையடைகிறோம்.

இந்நூலை குறுகிய கால அளவில் மிகச் சிறப்பாக அச்சிட்டுக் கொடுத்த விசாலம் பிரிண்டிங் ஹவுஸ் அச்சகத்தாருக்கு பதிப்பகம் நன்றி கூறிக்கொள்கிறது.

இந்த தமிழ்முறை எண் கணிதத்தை வாங்கி பயன் அடையும் வாசகர்கள் அவர்களின் மேலான கருத்துக்களை தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

விஷ்ணுப்ரேமி

# சித்தர்கள் கண்ட
# தமிழ் முறை எண்கணிதம்

அனுப்பபட்டி ப. சு. மணியன்

ஸ்ரீவித்யா பப்ளிகேஷன்ஸ்
சென்னை-33

# ஆசிரியர் முன்னுரை

ஆனவஞ்செழுத்துளே அண்டமும் அகண்டமும்
ஆனவஞ்செழுத்துளே ஆதியான மூவரும்
ஆனவஞ்செழுத்துளே அகாரமும் உகாரமும்
ஆனவஞ்செழுத்துளே அடங்கள் ஆவலுற்றதே.

அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை யோதுகின்ற பஞ்சபூத பாவிகள்
அஞ்செழுத்திலோ ரெழுத்தை அறிந்து கூற வல்லிரேல்
அஞ்சலஞ்ச லென்று நாதனம்பலத்திலாடுமே

என்பது சித்தர் சிவவாக்கியார் பாடல். இந்தப் பாடலிலே எத்துணை கருத்துக்கள் அடங்கியுள்ளது. கருத்துக்களா? அண்ட பிண்ட விளக்கம் அல்லவா அடங்கிக் கிடக்கிறது?

சித்தர்தம் கருத்துக்களையும் அவர்கள் வாழ்ந்த காலங்களையும் கண்டுபிடிக்க முடியாத தொன்மையானது. கடலுள் மூழ்கிவிட்ட கொண்டுவானா லேண்ட், லேமூரியாக் கண்டம் என்றும் குமரிக் கண்டம் என்றும் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிட்டுக் காட்டும் அந்தக் கண்டங்களில் பரவி வாழ்ந்தவர்கள் தமிழர்கள். அந்தக் கண்டத்தில் இருந்த மேருமலை, சித்தர்களின் இருப்பிடமாக இருந்தது. ஆகவே, அக்கண்டங்களில் பரவி வாழ்ந்தார்கள் தமிழர்கள். கி. மு. 30,000 ஆண்டுகளுக்கு முன்னரே சங்கத் தமிழும் இலக்கியமும், இலக்கணமும் கண்டு வாழ்ந்த பரம்பரை தமிழ் இனமே.

அன்றைய தமிழர்களின் கலையும், விஞ்ஞானமும் உலகத்தின் முக்கியத்துவம் வாய்ந்தது. அதிலும் அன்றைய சித்தர்கள் விஞ்ஞானம் என்பதே மனிதன் யார் என்று தன்னை அறிவதே. அறிந்தபின் தன்னை இப்படிப் படைந்துவிட்ட தலைவன் யார் என்றும், அண்ட பிண்ட இயக்கத்தின்

ஆதாரம் என்னவென்று அறிந்து தலைவனை அடையும் வரை உடலையும் உயிரையும் நிலை நிறுத்தும் முயற்சிகளே சித்தர்கள் கொள்கை.

அம்பலத்தில் நடனமாடிக் கொண்டிருக்கும் நடராஜ பெருமானின் ஆனந்தக் கூத்தாடும் தத்துவத்தின் கருத்து என்னவெனில், அண்ட பிண்டங்களை ஆட்டுவித்துக் கொண்டிருக்கும் தத்துவமே. எந்த உடலில் உள்ள உயிர் இயக்கத்தில் ஜீவனாகிய பிராணனின் கூத்தாட்டம் நிற்கிறதோ அந்த உடல் மண்ணாகி சாம்பலாகி பஞ்சபூத மாகி விடுகிறது.

ஆகவே, உடல் அந்த நிலையை அடைவதற்கு முன்னே தான் யார், தன் வாழ்க்கை தத்துவமும் நோக்கமும் என்ன என்று உணர்ந்து கொள்வதே ஜீவ தத்துவத்தின் முக்கிய அம்சம்.

அந்த வகையில் மனித சமுதாயத்தினுடைய உயரிய உயர்ச்சிக்கு ஏதாவது கலைகளோ வித்தைகளோ, தொழில் களோ இருந்தால் அவற்றின் அபிவிருத்திக்கு உதவ வேண்டும் என்பதே எனது ஆசையும் கொள்கையும். மனித சமுதாயத்தோடு சார்ந்து வாழ்கிற பொது மனிதனின் கடமையும் இதுவே.

ஆகவே, வாழ்க்கையே ஒரு கலை. இதை வெற்றிகர மாக்க உதவக் கூடிய சாஸ்திரங்களை மக்களுக்குப் பயன் படும் வகையில் விளக்குவதே எனது நோக்கம்: சாஸ்திரங் கள் எத்தனையோ மகத்துவம் நிறைந்த அடிப்படைகளின் மீதே உருவாக்கப்பட்டிருக்கிறது. நகரங்களும், நாகரீகங் களும், சாம்ராஜ்யங்களும் அழிந்தபோதும் இந்த சாஸ்திரங் கள் ஒரு போதும் அழியாது தன்னை நிலைநிறுத்திக் கொள்கிறது. எனவே இதைப் புரிந்து கொள்ளும் ஆசை இருக்கிறவர்கள் ஊன்றிய கவனத்துடன் அமைதியான

முறையில் எனது கருத்துக்களை விரிந்த மனப்பான்மையில் கண்டால் பரிபூரண திருப்தி அடையலாம்.

இந்த சிறு முயற்சி ஒரு பானை சோற்றில் ஒரு சோற்றை பதம் பார்ப்பது போன்றதே. ஆகவே, இந்தக் கருத்துக்களே உலகத்தின் அடிப்படைத் தத்துவம் என்பதில் கொஞ்சமும் ஐயம் இல்லை. இந்த சிறிய நூலைக்கொண்டு உங்களின் பிறப்பு, குணம், நீங்கள் ஈடுபட வேண்டிய காரியங்கள், நீங்கள் சமுதாயத்தில் எந்த வித வாழ்வை வாழலாம் என்றும் உங்களை உறுதிப்படுத்த இது உதவியாகவே இருக்கும் என்பது எனது நம்பிக்கை.

— ப. சு. மணியன்
'சக்தி இல்லம்'
அனுப்பபட்டி-638664

# தமிழ்முறை எண் கணிதம் குறித்து வாசகர்களுக்கு

கீலங்காலமாக பழக்கத்தில் கொண்டுவந்து பழகிப் போய் விட்ட ஒன்றை மறுத்தாலோ மறுப்பு தெரிவிக்கப் பட்டாலோ அதை ஏற்றுக்கொள்ள சங்கடமாக இருக்கும். ஆனால் ஆதாரத்துடன் கூறப்பட்டு அவை அனுபவத் திற்கும் வந்து, அனுபவித்து அறிந்துகொண்டபின்னே ஏற்றுக் கொள்வது என்பது உலக மரபாகி விட்டது.

உலக வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் உலகிலேயே வளர்ந்து செழித்த கலைகளிலும் மொழிகளிலும் தமிழ்க் கலையே மிகப் பழமையானதும், இலக்கண இலக்கியச் சிறப்பும் கொண்டது என்று குறிப்பிட்டிருக்கின்றனர். இன்றைக்கு இரண்டு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இயற்றப் பெற்ற நமது பழந் தமிழ் இலக்கியங்கள் எக்காலத்துக்கும் ஏற்புடையதாக அமைந்துள்ளது, வாழ்க்கை முறைகளைத் தெளிவாகக் காட்டுகிறது என்றால் அதற்கு முன்பு எத்தனையோ ஆயிரம் ஆண்டு களாக கடைப்பிடிக்கப்பட்டு வளர்ச்சியடையப் பெற்றதே தமிழர் தம் கலை.

சோவியத் நாட்டின் வரலாற்று ஆசிரியரான ஏ. கொந்தராத்தோவ் என்பவர் லெமூரியாக் கண்டத்தின் மர்மம் என்ற நூலில் ‘இக்கொண்டுவானாப் பெருங்

கண்டத்தின் வடபகுதியில் பழந்தமிழர் வாழ்ந்த லெமூரியா, அடங்கி இருந்ததாகக் குறிப்பிட்டு அவர்களின் கலை நாகரீகம் இலக்கிய வளர்ச்சி குறித்தும் ஆராய்ந்து கூறி இருக்கிறார். குமரிக்கண்டமே லெமூரியா ஆகும். அங்கு மேருமலை, மணிமலை, மகேந்திரமலை போன்ற மலைகளும் பஃறுளியாறு கன்னியாறு, குமரியாறு போன்ற நதிகளும் ஒளிநாடு, பெருவளநாடு, கன்னிநாடு, ஏழ்பனை நாடு, ஏழ்தெங்கநாடு, தென்மதுரை, கபாடபுரம் போன்ற பெயர்களை நாம் இலக்கியச் சான்றுகளாவும், தமிழ்ச் சங்கம் நிறுவி கலை இலக்கிய ஆராய்ச்சி நடந்தவைகளைப் பற்றி - மதுரைக்காஞ்சி, ஐங்குறுநூறு, பெருந்தொகை, சிலப்பதிகாரம் போன்ற நூல்களிலே சான்றுகளைக் காணலாம்.

தமிழின் உயர்வை, தமிழ் கலைகளின் உயர்வை ஒரு தமிழன் சொன்னால் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. இதையே ஒரு மாக்ஸ்முல்லரோ, கால்டு வெல்லோ ரெவ லென்ஸ். பெர்ஷிவால் போன்ற மேல்நாட்டு அறிஞர்கள் சொன்னால் நாம் அப்படியே ஏற்றுக்கொள்கிறோம். ஆகா என்கிறோம்.. ஆனால் தமிழ்க்கலைகளைப்பற்றி ஒரு தமிழன் ஆராய்ந்து வெளியிட்டால், அது எப்படி ஏற்றுக்கொள்ள முடியும் என்று வாய் பிளக்கின்றனர்.

தமிழரும், தமிழ் கலைகளும், தமிழர் பண்பாடுநாகரீகமும் உயர்ந்து ஓங்கி நிற்கும்போது இதை அழித்து பிற கலைகளை புகுத்த தமிழ்பகைவர்களாக - தமிழ்கலைகளின் விரோதி களாக முகமதியர்கள், ஆரியர்கள், ஜெயினர்கள், பௌத் தர்கள், இறுதியாக ஆங்கிலேயர்கள் ஒன்று சேர்ந்து அவர் களது கலைகளை பரப்பி—நமது கலைகளை அழித்தனர் அல்லது நமது கலைப் பொக்கிஷங்களை அவர்களது பாஷைகளில் எழுதி வைத்துக் கொண்டு நமது கலைகளை அழித்தனர் என்பதற்குச் சான்றுகள் நிறைய உண்டு என்பதை ஆராய்ச்சியாளர் அறிவர்.

அவைகளை பட்டியலிட்டு காட்டவும் விமர்சிக்கவும் முயன்றால் இந்நூல் ஆராய்ச்சி நூலாகிவிடும். ஆகவே நாம் சுருங்கக் கூறி நமது தமிழ்க் கலையின் பண்பை நிலை நாட்டுவோம்.

''இந்திய தத்துவத்தோடு ஒப்பிடும்போது ஐரோப்பிய தத்துவமானது ஒளிவீசும் நண்பகல் சூரியனுக்கு முன் எரியும் அகல்விளக்குப் போன்றது'' என்று ஜெர்மன் அறிஞர் ஷெலி கால் குறிப்பிடுகிறார். இதிலிருந்து இந்தியத் தத்துவம் உயர்ந்ததென்றாவது ஒத்துக் கொள்ள வேண்டும். இதையே ஆரம்ப பலஹீனமாகக் கொண்டு விஷயத்திற்கு வருவோம்.

இது வரையிலும் பலருக்கும் தெரிந்த எண் கணிதம் சால்டன், ஹிப்ரு முறைகளில் ஆங்கில மொழியில் எழுதப் பட்டு அவை ஆங்கில எழுத்துக்களுக்கான 'ஏ' முதல் இஜட்' வரையில் உள்ள இருபத்தி ஆறு எழுத்துக்களையும் ஒன்பது கிரகங்களுக்கு பகிர்ந்து கொடுத்து, அந்த ஒன்பது கிரகங் களுக்கு எண்களைக் கொடுத்து, அந்த ஒன்பது கிரகங்களின் தன்மை அந்த எண்களுக்கு இருப்பதாகப் பாவித்துக் கொண்டு எண் கணிதப் பலன்கள் சொல்லப்பட்டு வருகிறது.

ஆனால் எனது ஆய்வு முறைகளில் மேற் கூறிய ஆங்கில முறை எண் கணிதம் எந்தவிதமான ஆதாரப் பூர்வமான அடிப்படைக் காரணங்களை காட்டமுடியாத படி இது ஒரு அபிப்பிராயமாகவே கூறக்கூடியதாகும்.

நான் விளக்கிக் கூறவிருக்கின்ற இந்தத் தமிழ்முறை எண் கணிதம் இதுவரையில் தமிழ் மொழியில் யாருமே அறிமுகப் படுத்தாத, யாரும் இது வரை படித்துணராத ஒரு புதிய முறையை எனது ஆராய்ச்சியின் மூலமாக நான் அனுபவித் தும் பிறருக்கு எடுத்து கூறி உறுதிப்படுத்தி அவர்களும் அனு பவத்தில் ஒத்துக் கொண்டதாக கூறிய பின்புதான்—இந்த தமிழ் எண் கணித முறையை புத்தக வடிவில் தமிழ் உலகத் திற்கு முதல் பதிப்பாகக் கொடுத்து அதைப் பலர் ஏற்றுக்

கொண்டு விற்பனையாகிவிட்ட பின்பு இதை இரண்டாம் பதிப்பாக தமிழ் மொழிக்கும், தமிழ்மக்களுக்கும் படைத்திருக்கிறேன். இது புதியமுறை என்றாலும் இது பழங்காலத்திலே சித்தர்களால் கையாளப்பட்ட ஒரு கலையாகும். இது முழுக்க முழுக்கத் தமிழ் முறையே. இது கி.மு. 750 ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்ச் சித்தர்கள் தங்களின் ரசவாத ஆராய்ச்சிகளிலும், ஆன்மத் தத்துவங்களிலும் ஆராய்ந்து கண்டதும்' கடைப்பிடித்ததும் ஆகும்.

இந்த தமிழ்முறை எண் கணிதத்தின் முதல் பதிப்பை படித்த ஒரு எண் கணித நிபுணர் என்னிடம் ஆத்திரமாக வந்து,

'எந்த அடிப்படையிலே ஆங்கில முறையை நீர் ஏற்றுக் கொள்ளவில்லை' என்று கேட்டார்.

என் அனுபவத்தில் அனுபவித்த பின்தான் என்றேன்.

வாரத்தின் முதல்நாள் ஞாயிறு, அந்த ஞாயிற்றின் அதிபதி சூரியன். அந்த முறைப்படி ஆங்கில முறையில் ஒன்று முதல் எண் சூரியனுடையது, அடுத்தது 2, சந்திரனுக்கும் 3குருவுக்கும்—4வது என்று இழுத்தார்.

நான் கூறினேன், இதன் அடிப்படையே தமிழ்முறை தான். ஆதி-தந்தை சூரியன்-மதி சந்திரன் தாய். இதற்கு ஒரு உதாரணம் கூறுகிறேன் என்று - 'சந்திரனே தாயாய் தாழ்வில் கதிர் தந்தையாய்' என்ற பாடலை கூறி விளக்கினேன். ஆமாம் இதிலும் உண்மை இருக்கிறது என்றார்.

எண்முறைகளின்படி 7 என்று வரிசைப்படுத்தியுள்ள வார முறைபற்றி ஏ.எல்.கிரோபர் என்ற மானுடவியலார் இன்று நாம் அறிந்துள்ள வாரமுறையானது, கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு அதாவது ஒரு நூற்றாண்டுக்கு முன்பு ஆசியாவிற்கு பக்கத்தில் தோன்றிப் பின்னர் அலெக்ஸாண்டிரியாவிற்கு கொண்டுசெல்லப்பட்டு அங்கிருந்து

கிரேக்கம், ரோம் மற்றும் பிற நாடுகளில் பரவியது. "This was the week as we know it, evolved perhaps some what more than a century before christ in nearer Asia carried back into Alexandiria and there imported to Greeks, soon Romans and other nationalities". Anthropology A.L. kroeber. P. 486.

சூரியன் சந்திரன் இருவரும் உலகின் தாய்தந்தையராய் 12 ராசிகளை 360 டிகிரி பரப்பை அரசாட்சி செய்து-காலனிகளை உருவாக்கி இருக்கிறார்கள். ஆக சூரிய சந்திரர் களுக்கு 12 ராசிகள் சொந்தம் - அதை தாங்கள் இருவரும் இருவீடுகளை நீக்கி மற்ற ஐவருக்கு இரண்டிரண்டு வீடாக பங்கு கொடுத்து அவர்களது ஆட்சியைக் கண்காணித்து நின்றார்கள். இது தாய் தந்தையரின் வேலைः வரிசை எண் பெற்ற விதத்தையும் விளக்கி எனது நியாயங்களையும் உறுதிப்பாடுகளையும் - ஆங்கில முறை கற்ற பலரிடம் விளக்கிக் காட்டியபோது உண்மை புரிந்து ஆச்சரியப்பட்டு புன்முறுவல் பூத்தனர். முதல் பதிப்பு 54 பக்கம் 4000 பிரதிகள் வெற்றிகரமாக விற்றதினால் இக்கலையை மக்கள் ஏற்றுக்கொண்டனர் என்று தெளிவாகியது. பலபேர் இது இன்னும் விளக்கமாக எழுதப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். அதன்பிறகே சற்று விரிவாக இந்த இரண்டாம் பதிப்பு எழுதப் பெறுகிறது. அவசரப்பட்டு எண்களும் அதற் குரிய பலன்களும் என்பதையே படிக்காமல், இந்த எண்ணின் அடிப்படையில் அமைந்துள்ள தத்துவங்களைப் படிக்க முன் வருவீர்களேயானால், உங்களது மனிதப்பிறவி மிகச்செழுமை யாக்கப்பட்டு தன்னையறிந்தபின்னே தனக்கொரு கேடில்லை என்ற பரிபாஷையின் பொருள் உணர்ந்து வாழ்க்கையை கேடில்லாத பீடு உடையதாக்க முடியும் என்பதை சிந்தித்து, சில தத்துவ அடிப்படை விளக்கங்களை மீண்டும் முதலி லிருந்து படியுங்கள் எனக்கேட்டுக் கொள்கிறேன்.

இந்தத் தமிழ் முறை எண்கணிதத்தில் மொத்தம் ஐந்து எண்களே உலகத்தை ஆளுகிறது. இந்த ஐந்து

எண்களே ஐந்து பூதங்கள். இந்த ஐந்து எண்களுக்குள்ளே தான் 247 தமிழ் எழுத்துக்களும், உலகில் உள்ள பிறமொழி எழுத்துக்களையும் அடக்கலாம் இந்த மொழி எழுத்துக் களுக்கு 5எண்களே முக்கியத்துவம். ஒன்பது நவகிரகங்களும் 5 எண்களிலே அடங்கும். வாரத்தின் ஏழு நாட்களும் இந்த ஐந்துக்குள்ளேயே அடங்கும். இது எப்படி? ஏன்? இது உண்மையா? என்பதை அறிந்துக் கொண்டு விட்டால் தன்னை யார் என்று அறிந்து கொள்ளும் தத்துவமே புலப்படும். அதைப் புலப்படுத்தி புரியவைத்து தன்னைத் தான் உணர வைப்பதே இந்தத் தமிழ் முறை எண் கணி தத்தின் தலையாய நோக்கமாகும்.

தமிழ் சித்தர்கள் தான் இருந்த இடத்தில் அமர்ந்து கொண்டே எத்தனையோ அண்டபிண்ட தத்துவங்களை கூறி வந்தனர். இவர்கள் கூறிய முறைகளே உலகம் தோன்றிய நாளிலிருந்து மனிதர்களையும் மற்றவைகளையும் ஆண்டு கொண்டு வந்திருக்கிறது. இவைகளையெல்லாம் சாமான்ய மான நாம் அறிந்து கொள்ள முயலுவதும், விரும்புவதும் இல்லை, இதைக் கட்டாயம் அறிந்து கொள்ளத்தான் வேண் டும் என்ற அக்கறையும் நமக்கு வருவதில்லை. நமது நோக்க மெல்லாம் உண்பது, களிப்பது, செல்வம் சேர்ப்பது இவை களே. இந்த முயற்சிகளில் இடையூறுகளும், தோல்விகளும் ஏற்படும்போதுதான் நாம் சோதிடக் கலையையும், சோதிடர் களையும் நினைக்க வேண்டி இருக்கிறது.

ஆனால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த தமிழ்ச் சித்தர்கள் இதைக்கண்டு இதன்ஆட்சிக்குள் தங்களை ஒழுங்கு செய்து கொண்டார்கள். இக்கலையை நன்றாக ஆராய்ந்து இதன் அடிப்படைத் தத்துவங்களை அண்டத்தி லும், பிண்டத்திலும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை புரிந் துணர்ந்து மனித குலத்திற்கு ஆன்மீகம் என்றும், ஆன்மாவின் தத்துவங்கள் என்ற சித்தாந்தக் கோட்பாடுகளில் அடக்கிக் காண்பித்தனர். ஆன்மீக நெறி என்பது உடல் பிறவி

எடுத்துக் கொண்ட ஆன்மா அடையவேண்டிய லட்சியங்களை யும் அதன் உயரிய பயன்களையும் அடைவதற்கு வழிகாட்டும் முறையேயாகும். உலகத்தையும் உயிர்களையும் எப்படிப் பட்ட தத்துவம் இயக்கி வருகிறது என்ற அடிப்படையை, காட்டுவதுதான் சித்தர் தத்துவமும், பஞ்சீகரணக் கொள்கை களும்.

## சித்தர் தத்துவம்

இன்றைய விஞ்ஞான உலகத்தில் எத்தனையோ கண்டு பிடிப்புக்கள் கண்டுபிடித்த மனிதன் இந்த உலக சிருஷ்டிக்கு ஆதாரமான அடிப்படைத் தத்துவங்களின் மாற்ற வளர்ச்சி களை எந்த விஞ்ஞானிகளாலும் வெற்றி காணமுடியவில்லை. தன்னை அறியாமலே அந்தத் தத்துவத்தின் இயக்கத்திலே கட்டுண்டு காலப் போக்கிலே அவன் உடல் மாற்றத்தினால் மரணம் அடைந்து விடுகிறான். ஆனால் சித்தர்கள் சாவைப் பற்றி அஞ்சாதவர்கள். மரணத்தை வெல்லக் கூடியவர்கள். மரணமில்லாப் பெருவாழ்வை அடைந்தவர்கள். அவர்களின் ஆராய்ச்சிகளிலும்,மனிதனுக்கு உலகத்தையே தன்வசமாக்கி கொள்ளக்கூடிய சக்தியை பெறுகிறான் என்கிறார்கள்.ஆனால் மேல்நாட்டு நூல்களோ மனிதன் தன்னுடைய கனதியை மாத்திரம் தூக்கவல்ல சக்தியைத்தான் பெற்றிருக்கிறான் என்று கூறுகிறது. மேலும் சித்தர்கள் நூல்களில் தெய்வத் தன்மைபொருந்திய உள்மனிதனைக்குறிக்கிறது. தற்காலத்து நூல்களோ ஒரு யோக்யதையும் இல்லாத வெளி மனிதனை மட்டுமே காட்டுகிறது. சித்தர்கள் ஆராய்ச்சியில் உயிரோடு இருக்கும் மனிதன், தான் பிரியப்பட்டால் சாகாமல் நீண்ட காலம் இருக்கலாம் என்பதைக் கற்பிக்கிறது. ஆனால் இன்றைய விஞ்ஞான நூல்கள் மனிதன் சில வருஷங்கள் மட்டுமே உயிர்வாழ முடியும் எனக் கூறுகிறது. பிரகிருதி சுபாவத்தில் மரணம் என்பது ஒரு முக்கியமான அம்சம் அல்ல. மனிதன் தொன்றுதொட்டு பழகிவரும் அறியாமை யினாலும், பயத்தினாலும் தனக்குத் தானே தப்பாக

எண்ணுவதினாலும், பஞ்சபூத தத்துவங்களை உணர்ந்து கொள்ளாததினாலும் மரணத்தை அடைகிறான். சித்தர்களோ உடம்பில் உள்ள அணுத்திரள்களை தகுந்தபடி தனக்குள்ள ஆத்மசக்தியால் மீண்டும் ஒழுங்குபடுத்திக் கொள்வதால் நோய் அல்லது மரணத்தைத் தடுப்பார்கள். ஆகையால் அவர்களுக்கு மரணம் என்பதே கிடையாது. மரணத்தைத் தரும் ஐம்பூத சக்திகளை உடம்பிலிருந்து மாற்றி, மரணமில்லாத ஐம்பூத சக்திகளை உடம்பில் நிறைத்துக் கொள்கிறார்கள்.

## ஐம்பூதக் கொள்கை:

ஐம்பூதம் என்பது என்ன? இவைகளை விளங்கிக் கொண்டு விட்டால் தான் இந்த தமிழ் முறை எண் கணிதத்தை எளிதாக விளங்கிக்கொள்ள முடியும். ஆகவே இந்த ஐம்பூத தத்துவத்தை சுருக்கமாக நான் விளக்க வேண்டியுள்ளது.

இன்றைய மனிதர்களில் பலர் அண்டத்தில் உள்ள கோள்களும், அவற்றின் இயக்கங்களும் பிண்ட வடிவில் உள்ள மனிதனை எவ்விதம் கட்டுப்படுத்தும் என்று ஏளனமாக ஒரு கேள்வியை மிடுக்காகக் கேட்டுவிட்டு பெருமிதம் கொள்கிறார்கள். இந்தக் கேள்விக்கு சரியான விடையை பொருத்தமான முறையில் இன்றைய சோதிட வல்லுனர்கள் கூற முடியாது ஒரு விதமாகத் தவிக்கின்றனர். இந்தக் கேள்விக்குச் சரியான விளக்கத்தை இந்த தமிழ் முறை எண்கணிதம் போதிக்கும்.

சாதாரணமாக வீட்டிற்கு வெளியே தாங்க முடியாத வெய்யில் கொளுத்தினால் வீட்டினுள் இருக்கும் மனிதனின் உடல் உஷ்ணத்தினால் தகித்து வியர்த்துக் கொட்டுகிறது. அதிலிருந்து தன்னை காக்க குளிர்ச்சிகளை தேடுகிறான். வீட்டிற்கு வெளியே மழையும் குளிரும் கொட்டும் போது உடலில் நடுக்கமும் குளிரும் ஏற்படும். அதிலிருந்து

தன்னைக்காத்துக் கொள்ள உஷ்ணத்தைத் தேடுகிறானே ஏன்? அண்டத்தில் ஏற்பட்ட மாற்றம் பிண்டத்தில் உறுத்தி-உணர்வுகளை ஏற்படுத்துகிறதே எப்படி? காலங்களும்—பருவங்களும் மாறுகிறபோது - பருவங்களுக்கேற்ற உணவு, உடை, பழக்கவழக்கம் மனிதனைப் பற்றுகிறதில்லையா?

சித்தர்களின் கருத்துப்படி வெளியே உள்ள இவ்வுலகத்திற்கும் மனிதனுக்குள்ளும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. உண்மையாக மனிதன் அண்டத்தின் சிற்றுருவமே ஒழிய வேறில்லை. அண்டாகாயம் கிரகங்களை சஞ்சரிக்க வைக்கும் வெளி. பிண்டாகாயம் என்பது மனம் என்னும் வெளி. நல்லது கெட்டதுகளை சஞ்சரிக்க வைக்கும் வெளி. (நற்சிந்தனை, துர்ச்சிந்தனை) அண்டாதித்தன் சூரியன், பிண்டாதித்தன் ஜீவாக்கினியாகும்.

அண்டத்தில் உள்ளதே பிண்டம்
பிண்டத்தில் உள்ளதே அண்டம்
அண்டமும் பிண்டமும் ஒன்றே
அறிந்துதான் பார்க்கும் போது

—என்பது சட்டைமுனி ஞானம்.

அதாவது உலகத்தில் இருப்பதுவே மனிதனுள்ளும் இருக்கிறது. ஆகவே நவகிரகங்களும் பஞ்சபூதங்களும், அதன் அதன் கிருத்தியங்களை மனிதன்மேல் செலுத்துகிறதினால் மனிதன் அதற்குட்பட்டவனாகிறான். அதனால் மனிதனின் சுபாவ கிருத்தியங்கள் நல்லதாயின் மனிதனுக்கு நன்மையே விளைவிக்கிறது. கெடுதியாயின் கெடுதலையே விளைவிக்கும்.

எவன் ஒருவன் பஞ்சபூதங்களின் ரகசிய விதிகளின் உண்மையை அதாவது பஞ்சீகரண சக்தியை தெரிந்து கொள்கிறானோ அவன்தான் ஒரு உலோகத்தை மற்றொரு உலோகமாக மாற்றும் சக்தி வாய்ந்தவனாகிறான்.

பரமாணுக்களிலிருந்து தான் உடலும் உயிரும் தோன்று கிறது. பரமாணுக்களாவது நிலம், நீர், தீ, காற்று. ஆகாயம் இந்த ஐந்து பூதங்களின் கலப்பே உலகம் என்று நிலவியல் வல்லுனர்கள் கூறுகின்றனர். ஆகவேதான் பஞ்சபூதம் என்பது என்ன? பஞ்சபூத தத்துவத்தின் வழிமுறைகள் என்ன என்று விளங்கிக்கொள்ள வேண்டும். இதை விளங்கிக் கொண்டுவிட்டால் மனிதன் யார்? அவன் எப்படிப்பட்டவன் என்று உணர்ந்து கொள்ளலாம்.

## பஞ்சீகரணமும் பிரபஞ்ச இயலும்:

சூட்சம பஞ்ச பூதங்களில் இருந்து ஸ்தூல பஞ்சபூதங் களின் பஞ்சீகரணம் அல்லது ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கை விகிதம்.

### ❋ பிருதிவியாகிய மண் பூதத்தின் கலப்பு விகிதம்

*மண் (பிருதிவி) அரைவாசி - அழிவற்ற சூட்சும பூதமாகி அண்டத்தில் அப்படியே இருக்கும். பிருதிவி மறுபாதி யுடன் நீர் அரைக்கால், + தீ அரைக்கால், + வாயு அரைக் கால்+ஆகாயம் அரைக்கால் ஆக நீர் முதல் ஆகாயம் அரை பாகமும் மண் அரைபாகமும் கலந்து ஸ்தூல பிருதிவியாகும். (ஸ்தூலம்=கண்ணுக்குத் தோன்றுவது)

### ❋ அப்பு பூதமான நீரின் ஸ்தூல இயல்பின் கலப்பு விகிதம்

அப்புவின் அரைபாகம் அழிவற்ற நீர்வுருவாகி அண்டத் தில் அப்படியே இருக்கும். மறுபாதியுடன் தீ அரைக்காலும் வாயு அரைக்காலும், ஆகாயம் அரைக்காலும், பிருதிவி யாகிய மண் அரைக்காலும் கலந்து தேயுமுதல் பிருதிவி அரை அம்சமும்—அப்பு பாதியும் சேர்ந்ததே ஸ்தூல அப்பு பூதமாகும்.

## ❊ தேயு பூதமான தீயின் ஸ்தூல கலப்பு விகிதம்:

தேயு பூதமான தீயின் ஒரு பாதி அழிவற்ற தீயணுக் களாக அண்டத்தில் அப்படியே நின்று மறுபாதியுடன் வாயு அரைக்காலும், ஆகாயம் அரைக்காலும், பிருதிவி அரைக்காலும், அப்பு அரைக்காலும் சேர்ந்து வாயு முதல் அப்பு அரை பாகமும் தேயு அரை பாகமும் சேர்ந்து ஸ்தூல தேயு பூதமாகும்.

## ❊ வாயு பூதமான காற்று பூதத்தின் ஸ்தூல கலப்பு விகிதம்

வாயு பூதமான காற்று பூதத்தின் அரை பாகம் காற்றணு வாகி அழிவற்ற தன்மையுடன் ஆகாயத்தில் அப்படியே இருக்க மற்ற பாதியுடன் ஆகாயம் அரைக்கால் பங்தும், பிருதிவி அரைக்கால் பங்கும், அப்பு அரைக்கால் பங்கும், தேயு அரைக்கால் பங்கும் ஆக ஆகாய முதல் தேயு அரைப் பங்காகவும் வாயு அரைப்பங்காகவும் கலந்து வாயு பூதம் ஸ்தூலமாக தோற்றமெடுக்கும்.

## ❊ ஆகாய பூதத்தின் ஸ்தூல கலப்பு விகிதம்

ஆகாயமெனும் சுத்தவெளியின் பாதி ஆகாய அணுக் களாக அண்டவெளியில் அழிவற்று தனிமையில் நிற்கும். மறுபாதியுடன் பிருதிவி அரைக்காலும், அப்பு அரைக்காலும், தேயு அரைக்காலும், வாயு அரைக்காலும் ஆக பிருதிவி முதல் வாயு அரைப்பங்கும்—ஆகாயம் அரைப்பங்கும் சேர்ந் தது ஆகாய பூதத்தின் ஸ்தூல கலப்பாகும்.

ஐந்து பூதங்களின் நுண்மையான சூட்சும பாதிகளே அழிவற்ற மரணமில்லாத தன்மைகளைப் பெற்று உலகைப் படைக்கும் கருவாகி விந்துநாத (ஒளி-ஒலி) அணுக்களாக அண்டபிண்டத்தில் வியாபித்து நிற்கும்.

கண்ணுக்குத் தெரியும் படியாக ஸ்தூலமாக நின்ற பூதங்களே- உலகமாகவும், உலகத்தில் உள்ள உயிர்பொருள்

ஜடப்பொருள்களாக பரிபூரண வளர்ச்சி பெற்று உலகமாக தோன்றுகிறது.

இதன் தோற்ற ஒடுக்கத்தை வரிசைப்படுத்தினால் ஆகாயத்திலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும்—மண்ணிலிருந்தே தோற்றமும் உண்டாகிறது. இதைத் தத்துவமாக பார்த்தால், ஆகாயம் என்பது மனத்தின் வெளி, காற்று என்பது மனத்தை சலனப்படுத்தும் இயக்கம், தீ என்பது ஆசையுடன் கூடிய உணர்வு, ஆசையெனும் நெருப்பாகிய உணர்வுகளால் இளகி நீர்மையாக பெண்ணின் யோனியில் விழும் பனித்துளிபோல நீராகி, அந்த நீரே உடலாக—மண்ணாகப் பரிணமித்து— மண்ணில் விளையும் போக போக்கியங்களை (புவன போகங்கள்) அனுபவிக்கிறது.

இதன் ஒடுக்கங்களை வரிசைப்படுத்தினால் மண்ணை நீர் உண்ணுகிறது. நீரை தீ உண்ணுகிறது. தீ காற்றில் ஒடுங்குகிறது. காற்று ஆகாசத்தில் ஒடுங்குகிறது. ஆகாசம் மனசிலும், மனசு ஆணவ சக்தியிலும் ஆணவ சக்தி இலயத்திலும் ஒடுங்குகிறது. இதுவே ஒடுக்கம். ஆகவே இவைகளை இன்னும் தெளிவாக விளக்கினால் நூலின் நோக்கம் சிதைந்து இது தத்துவ நூலாகிவிடும்.

## தமிழில் எண் கணிதம்:
## சிருஷ்டி தத்துவம்:

மனிதன் தன்னுடைய வாழ்க்கையை எவ்வகை யிலேனும் ஒழுங்குப்படுத்திக் கொள்ளவும், சுகமாக வாழவும், விரும்பியதை அடையவும் எத்தனையோ வழிகளை எல்லாம் கண்டு பிடிக்கிறான். இறைவனுடைய சிருஷ்டி யிலே மனித சிருஷ்டியே மிகவும் உயர்வுடையது. ஆனால் மனிதனின் ஆற்றலும், அவனது படைப்புகளும் கண்டுபிடிப்புகளும் அனைவரையும் வியக்க வைக்கிறது

மனிதன் உலகையும், ஜடப் பொருள்களையும், துருவித் துருவி ஆராய்கிறான். ஆனால் மனிதன் அவனையே அவன் யார்? அவன் எங்கிருந்து எப்படி எதற்காக வந்தான், அவனை ஆள்பவரும், ஆட்டி வைப்பவரும் யார்? என்று தெரிந்து கொண்டானானால் அவனுடைய ஆற்றல் இன்னும் அளவு கடந்ததாகி விடும். மனிதன் தன் அறிவு, சிந்தனை இவற்றைக் கொண்டு விரிந்து ஆராய்ந்ததில் அவனுக்குத் தெரியாத ஏதோ ஒரு சக்தி அவனிலும் வேறாக வெளியே இருந்து கொண்டு மனிதனை ஆளுகிறது. அவனுடைய சுக துக்கங்களில் பங்கு கொண்டு, மிகச் சமீபத்திலும், தூரத்திலும் நின்று வேடிக்கை பார்க்கிறது, என்றெல்லாம் ஆராய முற்பட்டான். இந்த ஆராய்ச்சியின் விளைவுகளும், முடிவுகளும் இறைவன் மனிதனைப் படைத்தானா அல்லது உலகின் பல்வேறு பரிணாம வளர்ச்சிகளின் பயனாக மனிதன் இயற்கையாகவே உருவாகினானா? பூமிக்கு வெளியிலே இருந்து தோன்றும் சூரியன், சந்திரன் ஏனைய கிரகங்களும், நட்சத்திரங்களுக்கும், மனிதனுக்கும் சம்பந்தம் உண்டா? என்று பல விதமாக ஆராயத் தலைப்பட்டான். அந்த ஆராய்ச்சியின் ஒரு பகுதி அறிவியலாகவும், அறிவுக்கு எட்டாதவைகள் தத்துவங்கள் என்றும், இறைவனின் அபூர்வ சிருஷ்டி என்றும், ஞானிகள் சாஸ்திரங்களையும், புராணங்களையும், பல மத சம்பிரதாயங்களையும் உண்டாக்கினர். அவைகள் சமூகத்திலே பல தத்துவங்களாக தோன்றலாயின.

ஒரு வகையில் சொல்லப்போனால் எல்லாத் தத்துவங்களும் மனிதனால், மனிதனின் வாழ்வியலுக்கு தோற்றுவிக்கப்பட்டது. எல்லாக் கலைகளும், தத்துவங்களுமே மனிதனின் சௌகரியங்களுக்காக கண்டு பயன்படுத்தப்பட்டது. ஒரு தலைமுறையினரின் கண்டு பிடிப்புக்கள், ஒரு தலைமுறையினரின் தத்துவங்கள் அடுத்த தலைமுறையினருக்கு

பயன் உள்ளதாகவும் மாற்ற வளர்ச்சிகளுக்கு உட்பட்ட தாகவும், இருக்கின்றன.

சமூகம், பொருட்கள் தத்துவங்கள், இப்படிப் பிரித்துப் பார்த்தால் இம்மூன்றும் ஒன்றே. இம்மூன்றையும் தனித் தனியாகப் பிரிக்க முடியாது. சமூகம் மனிதர்கள் இல்லாமல் வாழாது. தத்துவங்கள் மனிதர்கள் இல்லாமல் தோன்ற முடியாது. மனிதனுக்கு வேண்டிய பொருட்கள் சமூகத்தின் கண்டுபிடிப்பு. ஆகவே தான் மனிதன் எல்லாவற்றிற்கும் காரணகர்த்தா. நாம் பள்ளிகளில் கற்கும் கல்வி நமது மூத்த தலைமுறையினரின் கண்டுபிடிப்பு. நாம் அனுபவிக்கும் டெலிபோன், டெலிவிஷன், ரேடியோ எல்லாமே நமது முந்திய தலைமுறையினரின் அறிவியல் ஆராய்ச்சியின் கண்டு பிடிப்புக்கள்.

இத்தனையும் கண்டுபிடித்த மனிதன் பிணி, மூப்பு, சாக்காடு, நரைதிரைக்கு உட்பட்டு வயோதிகம் அடைந்து நாளடைவில் மரணத்தை அடைகிறான். இது உலகம் தோன்றிய நாளில் இருந்து பிறப்பு—வாழ்வு—இறப்பு இப்படியே வருகிறது. இந்த பிறப்பையும் இறப்பையும் உண்டாக்குவது யார்? கிரகங்களா? மனிதர்களா? கடவுளா? இது ஒரு பெரிய கேள்வி. விடைகூற முடியாதது. ஆனால் இந்த கேள்விகளுக்கு உண்மையான காரணத்தைக் கண்ட வர்கள் நமது சித்தர்கள். அவர்கள் கண்டு பிடித்த காரணங்களை எழுதிவைத்து, மக்களுக்கு எடுத்துச் சொல்லி அது பொய்யல்ல, உண்மையே என்று அவர்களே தங்கள் வாழ்க்கையை நிருபித்துக்காட்டினர். அவர்களே பதினெட்டு சித்தர்களும் அவர்களுக்கு முன் வாழ்ந்த நவநாத சித்தர் களும்.

ஆகவே இறைசக்தி, இயற்கை சக்தி இவை உலகத்தை மாற்றும் விதம், உலகத்தை ஆளும் விதம் இவைகளை ஊன்றிக் கண்டுபிடித்தனர். இந்த சக்தியை உணர்வதே சுகமான வாழ்வு, அதிர்ஷ்டமான வாழ்வு, எண்ணியதை அடையும் வாழ்வு என்பது அவர்களின் நோக்கம்.

## மனிதன் யார்?

மனிதன் யார்? அவன் எங்கிருந்து வந்தான் என்ற கேள்விக்கு விடை கிடைத்தால் பல ரகசியமான உண்மைகள் வெளிப்படையாகி விடும். ஒரு சித்தர் கேட்கிறார் ''கருத்தரிக்கும்'' முன்னெல்லாம் காயம் நின்ற தெவ்விடம்? ஒரு தாயின் வயிற்றிலிருந்து ஒரு குழந்தை புதிதாக உலகத்திற்கு பத்து மாதத்தில் வருகிறது என்றால் அந்த பத்து மாதத்திற்கு முன் அந்த குழந்தையின் ரூபமும், உடம்பும் எங்கே என்னவாக எப்படி இருந்தது? உலகப் பொருள்களின் மீது அளவில்லாத ஆசை கொண்ட ஒருவன் இது வீணாசை பிரமை எல்லாம் அழிவுள்ளது. உடல் அழியும் போது எத்தனை செல்வங்கள் இருந்து என்ன பயன்? என்று பட்டினத்தாரைப்போல் 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடை வழிக்கே' என்று மருள் நீங்கி அருள் தரிக்கிறது. அப்படியானால் 'அருள் தரிக்கும் முன்னெலாம் ஆசை நின்ற தெவ்விடம்'? என்று அதே சித்தர் கேட்கிறார். இப்படிக் கேட்ட சித்தர் அவரே பதிலும் சொல்கிறார். 'கருத்தரிக்கும் முன்னெலாம் காயநின்ற தப்புவில், உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்பு நின்ற தேயுவில், அருட்தரிக்கு முன்னெலாம் ஆசை நின்ற வாயுவில் என்று. உடல் நீரும், மண்ணும், உயிர் தீ, மனம் - வாயு என்று பூதங்களைக் காட்டுகிறார்.

## பஞ்சபூதம்:

கருத்தரித்து குழந்தை ரூபமாகி இந்த உலகத்திற்கு வரும் முன்பு இந்த ரூபமும், உடலும், மண்ணாகவும் தீயாகவும இருந்தது. இது உண்மைதான். தாயும், தந்தையும் உணவு உட்கொள்கிறார்கள். உணவிலிருந்து

எழுவகைத் தாதுகளும் ஊனாக' உதிரமாக, நரம்பாக, எலும்பாக, மச்சையாக உடம்பு வளர்கிறது. இதில் பொருந்தியுள்ள பூதங்கள், ரூபமாக, உயிர்த்தீயாக, எண்ணம், செயல், ஆசை என்ற உணர்வுகளாக பரிணாமம் எடுக்கிறது. இந்த உயிருக்கு வேண்டிய உணவுப்பொருள் மண்ணிலிருந்து விளைகிறது. மண்ணிலே வித்தை ஊணுகிறோம். நீர் பாய்ச்சுகிறோம். நீரும், காற்றும், வெய்யிலும் ஆகாயமும் பருவங்களாக அவைகளை வளர்த்து வருகிறது. இதுவே உணவுப் பொருள்சளும் பிற பொருள்களும் உற்பத்திக்குக் காரணமாக இருக்கிறது. ஆகவே மண் என்பது அன்னம். ஒருவன் நோயாளியாகப் பல காலம் வாழலாம். ஒருவன் கைகால் ஊனமுற்றவனாகவும் வாழலாம். பணம் இல்லாமலும் வாழலாம். குருடனாகவும் வாழலாம். ஆனால் சோறு இல்லாமல் ஒரு வாரம் வாழ முடியுமா? முடியாது. ஆகவே இந்த சோறு என்ற அன்னச்சத்திலே உடம்புக்கு வேண்டிய பலவிதமான விகிதாச்சாரத்திலே குளிர்ச்சி, உஷ்ணம், வறட்சி உடம்பில் பரவும் உந்து சக்திகளாக உணர்வு, சுவை, காற்று, பார்வை, பலம், வெற்றிடம், யோசனை இவை எல்லாம் கிடைக்கிறது. இதன் அடிப்படைக் கூறுகளை சித்தர்கள் ஆராய்ந்தார் கள். இவைகளை பஞ்சபூதங்கள் என்று ஐந்து விதமான பிரிவுகளை உண்டாக்கினார்கள். இந்த ஐந்து பூதங்களே உலகை ஆளுகிறது. எல்லாவற்றையும் மாற்றி வைக்கிறது. குளிர்காலம், கோடைக்காலம், வசந்த காலம், இலையுதிர்காலம், கார்காலம், பனிக்காலம் என்றெல்லாம் கூறுகிற இந்த பருவங்களை எல்லாம் இந்த பஞ்சபூதங் களே இயக்குகின்றன. அண்டத்திலே உண்டாகும் மாற் றம் பிண்டத்திலே பாலப்பருவம், குமரப்பருவம், காளைப் பருவம், வயோதிகம் என்றும் பெண்களுக்கும், பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை போன்ற மாற்றம் பெறுகிறது.

## இயக்கு விதிகள்:

ஒரு வித்து இத்தனை நாளில் தான் முளைக்க வேண்டும் என்று ஒரு நியதி. முளைத்து வித்து இத்தனை காலத்திற்குள் பூத்து. பிஞ்சாகி காய்த்து கனிந்து தானாக விழ வேண்டும். இது எதிலும் ஒழுங்கான இயற்கையான விதி. இந்த விதி யாருடையது? காலங்கள் பல பிரிவாக பிரிகிறது. இந்தக் காலத்தில் தான் இன்னது நடக்க வேண்டும் என்ற கால புருஷ தத்துவத்தை ஆராய்ந்து பாருங்கள். இளமை, முதிர்ச்சி, வீழ்ச்சி என்றவைகள் மனிதனுக்கு மட்டுமல்ல. விலங்குகள், மர வகைகள் எல்லாமே ஒரே அழகான விதிக்குள் கட்டுப்பட்டே இயங்குகிறது. இந்த விதியை சரியானபடி அமைத்தது யார்?

உலகத்திலே பல மதங்கள் இருக்கிறது. இந்துமதம், கிறிஸ்துவமதம், இஸ்லாமியமதம், சமணம், பௌத்தம் யூதர் இப்படி எத்தனையோ மதம். அத்தனை மதத்து இறைவர்களும் தன் தன் மதத்து மனிதனுக்காக ஏதேனும் சிறப்பை வழங்கியுள்ளனரா? ஏசுவினால் படைக்கப் பட்டவர்களுக்கு மூன்று கைகளும் ஒவ்வொரு கையிலும் 8 விரலுமா கொடுத்தார்? இல்லையே! முஸ்லீம் மதத்து அல்லா தங்கள் மனிதர்களுக்கு இரண்டு மூக்கும் நான்கு கண்ணும், மூன்று காலுமா கொடுத்தார்? இல்லையே! உலகத்தில் உள்ள எல்லா மதத்து மனிதர்களுக்கும் இரண்டு கண், ஒரு மூக்கு, இரண்டு கை இரண்டு கால், கையிலும் காலிலும் எல்லோருக்கும் ஐந்து ஐந்து விரல்கள், ஐம்பொறி, ஐம்புலன் அறிவு எல்லோருக்கும் உடம்பில் ஒரே அளவான (பேரன்ஹீட்) உஷ்ணம் எல்லோருக்கும் வாத பித்த சிலேத்துமம் என்ற உடல் தாது. எல்லோரும் இன்புற வேண்டும் என்ற ஒரே ஆசை. இதனால் படைப்பவன் ஒரே ஒரு தன்மையான இறைவன் என்பதில் என்ன சந்தேகம். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பது பொய்யா?

பஞ்சபூதி விதி

இந்த ஒரே விதமான சட்டமும், விதியும் ஒரே இறைவனால் படைக்கப் பட்டதா? அல்லது வேறு வேறு இறைவனால் படைக்கப்பட்டதா? இதுவே நமது சித்தர்களின் ஆராய்ச்சி. அதன் வெற்றி தான் பஞ்சபூதக் கொள்கை. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில் இறைவனுடையது. அதை எப்படி செய்கிறார். பஞ்சபூதத்தை வைத்துக் செய்கிறார். எல்லா நட்சத்திரங்களுக்கும், எல்லாக் கிரகங்களுக்கும் இந்த பஞ்சபூதத்தின் அடைவும், அதன் கலப்பும், அதன் இயக்கமும் உண்டு. இந்த தத்துவத்தைப் புரிந்து கொண்டு விட்டால் ஒழிய மனித வாழ்வில் சுகம், துக்கம், பிணி, மூப்பு, வாழ்வு, சாவு, அதிர்ஷ்டம், துரதிருஷ்டம் என்றவைகளை உணரவும், அதை நமது ஆளுகையில் கொண்டு வரவும் முடியாது. ஆகவே ஐந்து பிரிவான இந்த பூதங்களில் எல்லாமே அடங்கி இருக்கிறது.

இதையே

'ஆதியான அஞ்சிலும் அநாதியான நாலிலும்
சோதியான மூன்றிலும் சொருபமற்ற ரண்டிலும்
நீதியரன தொன்றிலும் நிறைந்து நின்ற வத்துவை'

என்ற இந்த பஞ்சபூதக்கலப்பே இறைவனுடைய திருமேனி இந்த மேனியை அலங்கரிப்பவையே கிரகங்கள், நட்சத்திரங்கள். இந்த பஞ்சபூதத்தின் கலப்பே எல்லாவற்றிலும்

வள்ளுவர் திருக்குறளிலே, கூடா ஒழுக்கத்திலே கூறுகிறார்.

'வஞ்ச மனத்தான் படிற் றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்'

என்று பெரிய தத்துவத்தை உலகிற்கு விளக்குகிறார். வஞ்சம் பொருந்திய மனத்தை உடையவனது மறைவாகச் செய்யும் கூடா ஒழுக்கத்தை பூதங்கள் ஐந்தும் அதாவது உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற பூதங்கள் ஐந்தும் கண்டு தம் முள்ளே நகும். உலகத்தார் பிறர் அறியாமல் செய்வன வற்றிற்கு ஐம்பெரும் பூதம் சான்றாதலின், அவ்வொழுக் கத்தையும், அவர் மறைத்தவற்றையும் அறிந்து அவனறியாமல் தம்முள்ளே நகுதலின் அகத்தே நகும் என்று கூறுகிறார். சிலப்பதிகாரத்திலே கண்ணகி ஐம்பூதத்திடம் கட்டளை இடுகிறாள். கதிரவனைப் பார்த்து கள்வனோ? என் கணவன். எனக் கேட்கிறாள். 'இல்லை" என ஆகாசம் குரல் கொடுக்கிறது. உடனே தீ கடவுளுக்கு ஆணையிடுகிறாள். தீக்கடவுள் அவள் இட்ட வேலையைச் செய்கிறது. மதுராபுரித் தெருவில் தீ பற்றி எரிகிறது என்பதை சிலப்பதிகார வாழ்வியல் காப்பியம் காட்டுகிறதே இங்கு பூதங்கள் சாட்சியாகிறது.

ஆகவே, சித்தர்கள் தத்துவப்படி ஐம்பூதமே உலகத்தைப் படைத்து, காத்து, அழித்து வருகிறது. இந்தக் கருத்துக்களை மையமாக அமைத்து உண்டாகும் கருத்துக்கள் அழிவற்றவை. உண்மையானவை.

உலகத்துப் பொருள்கள் அனைத்தையும் 5 பிரிவாகப் பிரித்து அதற்குள் அடக்கிவிடலாம். இந்த ஐந்தின் செயலை உணர்ந்து கொண்டபின் அமரனாக வாழலாம். உலகத்தையும், தன் வசப்படுத்தலாம்,

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமென்று ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு.

என்பது குறள்.

ஆகவே சுருங்கக் கூறில் பஞ்சபூதங்களே உலகத்திலே உள்ள ஜடப் பொருள்களையும், உயிர்ப்பொருள்களையும்

ஜீவ, பிரானதப் பொருள்களையும், இயக்குகிறது என்பதை கருத்தில் கொள்ளவேண்டும். நாம் படிக்க இருக்கும் தமிழ்முறை எண்கணிதத்திற்கு இந்த பஞ்ச பூதமே முக்கியத்துவம். இதை அறியாவிட்டால் நாம் எண்கணிதத்தைப் புரிந்து கொள்ளமுடியாது.

எனவே, தமிழில் உள்ள 247 எழுத்துக்களையும் ஐந்து தொகுப்பாக பிரித்துக் கொண்டால் போதுமானதே. அதேபோல கிரகங்களையும், நட்சத்திரங்களையும் இந்த ஐந்து தொகுப்பில் அடக்கிக் கொள்ளவேண்டும். ஆகவே இந்த ஐந்து பிரிவுகள் என்ன என்று வாசகர்கள் தெளிவாக விளங்கிக் கொள்ளவேண்டும் பூதம் என்றால் என்ன என்பதை தெரியவேண்டும் அல்லவா?

பிருதிவி = மண், அப்பு = நீர், தேயு = நெருப்பு வாயு=காற்று ஆகாசம்—வெளி, இவைகளே பஞ்சபூதம் அதாவது ஐந்து வகையான பூதம் எனப்படும். நமது சரீரங்களும் பிற விலங்குகளின் சரீரமும், மற்றும் மரஞ் செடி கொடி ஆகியவைகளும் எல்லாப் பொருள்களிலும் இந்த பஞ்ச பூதத்தின் கலப்பு இருக்கும் இது இல்லாத பொருளே இல்லை. இதனாலேயே தான் இறைவன் எங்கும் நிறைந்தவனாகிறான்.

''நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்விசும்பு
நிலாப்பகலோன்
புலனாய மைந்தனொடு, எண்வகையாய்
புணர்ந்து நின்றான்.
உலகேழ் என, திசை பத்தெனதான் ஒருவனுமே
பலஆகி நின்றவா''

என்ற திருவாசகத்தினால் உணரலாம்.

இந்த பஞ்ச பூதங்களை இருபெரும் பிரிவாகப் பிரிக்க லாம். ஒன்று சூக்குமம். கண்ணால் பார்க்க முடியா தது - இன்னொன்று - கண்ணால் பார்த்து விளங்கும்

ஸ்தூலம். இதை அவ்வியக்தம், வியக்தம் என்று வேதங்களும் உபநிடதங்களும் பேசும். கண்ணுக்குப் புலப்படாத அவ்வியக்தமாகிய சூக்கும பஞ்சபூதங்களே சுத்த சைதன்யமான நித்திய வஸ்து அல்லது சச்சிதானந்த சொருபமாகிய பிரம்மம். ஆக இந்த பிரம்மத்தினின்று மூலப்பிரகிருதி தோன்றுகிறது. இதிலிருந்துதான் முக்குணங்கள் தோன்றி உலகத்தை படைக்கிறது.

சூக்கும ஐம்பூதங்களிலிருந்து ஸ்தூல ஐந்து பூதங்கள் தோன்றும் இந்த ஸ்தூலமாய்த் தோன்றும் ஐம்பூதங்களிலிருந்து தான் முக்குணங்கன் தோன்றி குண பேதம் அடைகின்றது. ஒவ்வொரு பூதத்தையும் இரண்டு பங்கு பண்ணி பாதியை அப்படியே அழிவில்லாது நிறுத்தி மறு பாதியை மற்ற நான்கு பூதங்களுக்கு சமமாகப் பகிர்ந்து கொடுக்கப்படும் இம்மாதிரி ஸ்தூல பூதங்கள் ஒன்றுடன் ஒன்று கலப்பதினால் உலகத்தில் உள்ள பொருட்கள் யாவும் உறுப்பெற்று நிற்கின்றன.

உதாரணமாக தேயுவென்ற நெருப்பு பூதத்தில் அரை பாகம் அப்படியே நிறுத்தி மற்ற அரைபாகத்தை நான்கு பூதங்களுக்கும் $\frac{1}{8}$ பங்காக்கி நான்கிலும் கலக்கும் போது ஸ்தூல பிரபஞ்சம் உண்டாகிறது.

இந்த ஸ்தூலமாக பிரிந்த பூதங்களே தேகமாகியும் அதன் 96 தத்துவங்களாகவும் மனிதனை இயக்கும். இந்த பூதங்கள் ஐந்துதான் ஞானேந்திரியம் ஐந்தாகவும், இதை ஆதாரமாகக் கொண்டு இயங்கும் கர்மேந்திரியங்கள் ஐந்தாகவும், தன் மாத்திரைகள் ஐந்தாகவும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற கரணம் நான்காகவும் இப்படி ஆன்ம தத்துவம் இருபத்தி ஐந்தாக மனிதனை நடத்துவிக்கும்.

மண்ணில் ஐந்து குணமும், நீரில் நான்கு குணங்களும், தீயில் மூன்று குணங்களும், காற்றில் இரண்டு குணங்களும், ஆகாயத்தில் ஒரு குணமும் உண்டு.

இதை

''செப்பிய பூதங்கள் சேர்ந்தோர் குறியன்றே
அப்பரிசு மண்ணைந்து நீர் நாலாம் ஒப்பரிய
தீயாகின் மூன்று இரண்டு காற்றாம் பரமென்று.

என்ற பாடல் விளக்குகிறது. பிருதிவியாகிய மண்ணுக்கு ஐந்து குணம் இருப்பதால் இது மகா பஞ்சபூதம் ஆகும். பிருதிவி, தோற்றுவிக்க மற்ற தாது தாவர, சங்கமங்கள் தேவர், நரர், மக்கள் யாவரும் உற்பத்தியாவர்.

மானுட தேகம்:

மெய் வாய் கண்மூக்கு செவி எனப்பேர் பெற்ற
ஐவாயுமாய் அவற்றின் மீதடுத்துத்துயய
சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தால்
அவை முதல் புற்கலமாம்!

என்ற எடுத்துக்காட்டின்படி, பூதங்கள் ஐந்தும் தத்தமது தன்மைநீங்கி மண் உடம்பாகவும், நீர் வாய் ஆயும், தீ கண்ணாயும், காற்று மூக்காயும், ஆகாயம் செவியாகவும் உடம்பில் பொருந்தி நிற்கும். இந்த ஐந்து பூதங்களும் மேற் சொல்லிய ஐம்பொறிகளில் ஏறி மண்ணால் உடம்பு ஊனாயும், நீரால் வாய் சுவையாயும், தீயாற்கண் ஒளியாயும், காற்றால் மூக்கு நாற்றமாயும், வானால் செவி ஓசையாயும் வந்து பொருந்தி நிற்கும். மேலும், மண்ணின் பகுதி நரம்பு இறைச்சி, எலும்பு மயிர், தோல் ஆகிய ஐந்தும், நீரின் பகுதியானது சிறுநீர், மூளை, நிணம், உதிரம் சுக்கிலம், சுரோணிதம் மேற்கூறியவை. மண் நீர் இவைகளின் கூட்டு பூமியிலிருந்து அன்னம் (சோறு) தோன்றி அன்னத்திலிருந்து ரசந்தோன்றி, ரசத்திலே உதிரந்தோன்றி, உதிரத்தில் மாமிசம் தோன்றி, மாமிசமாகி ஊணில் (கொழுப்பு) மேதை தோன்றி, மேதையாகிய இக்கொழும்பிலிருந்து அஸ்தியாகிய எலும்பு தோன்றி, எலுப்பிலிருந்து

மச்சையாகிய மூளை தோன்றி, இந்த மூளையிலிருந்தே சுக்கில சுரோணிதம் தோன்றும்.

தீயின் குணமாவது: பசி, சோம்பல், மைதுனம், சம்போக ஆசை, காட்சி, நீர்வேட்கை இவைகள் உண்டாகும்.

காற்றின் குணமாவது: போக்கு, வரவு, நோய் சுவாசத்தைப் பரவச்செய்தல், பரிசம் இவை காற்றின் குணம்.

ஆகாயத்தின் குணமாவது: வெகுளி, மதம், மானம் அகங்காரம், உலோபம் இவை ஆகாயத்தின் குணமாகும் இப்படி இப்படி ஒவ்வொன்றும் ஐந்து ஐந்தாக பிரிந்து 25 தத்துவங்களாகும்.

இனி அந்தகரணங்கள் நான்கு. இவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவையாகும். இதில் மனம் இச்சிக்கும். புத்தி நிச்சயிக்கும். அகங்காரம் தொழில் படுத்தும். இந்த மூன்றுக்கு காரணமாக இருப்பது சித்த மாகும்.

இந்த நான்குமே மனித வாழ்வின் முக்கியத்துவம் மிக்கதாகும். இதன் போக்கிலிருந்துதான் மனிதன் நல்லவன். கெட்டவன், அதிர்ஷ்டசாலி, யோகி. ஞானி, பேரறிஞன் என்ற தீர்மானங்களுக்கு ஆளாகிறான்.

மனம்: இது வாயுவின் அம்சமானது. வாயு எங்கும் திரிந்து அலையும் சொரூபம் உள்ளது. நினைவு, மறதி என்கின்ற சங்கல்ப விகல்பங்களைக் கொண்டு வாயுவைப் போல் அலைந்து திரியும். இந்த மனதின் அதிதேவதை சந்திரன் என்றும், இதன் ஸ்தானம் உந்திக்கமலம் என்றும் கூறலாம்.

புத்தி: இது தேயுவாகிய நெருப்பின் குணமாகை யால் பொருள்களின் சுய உருக்களை நிச்சயித்து அதன்

விருத்திகளை அறிவது புத்தியாகும். இது பொருட்களின் வகைகளையும் அதன் தராதரங்களையும், செயல்களையும் நன்மை தீமைகளையும் ஆராய்ந்து நிச்சயித்து உணரும். புத்தியின் அதிதேவதை பிரம்மன். இதன் ஸ்தானம் மூலமே.

சித்தம்: இது அப்புவான நீரின் குணமாகையால் பொருள்களின் மீதான நினைப்பே சித்தமாகும். இது பொறிபுலன்களுக்கு சலனத்தை விளைவித்து அதன் வழியே விஷயங்களுக்கு இழுத்துச்செல்லும். சித்தம் என்பதும் விரும்பியதைப் பெற நினைக்கும் உணர்வு. சித்தமும் மனமும் ஒரே வகையானது. இதனுடைய ஸ்தானம் நாபியாகும். இதன் அதிதேவதை விஷ்ணு.

அகங்காரம்: இது பிருதிவியாகிய மண்ணின் அம்சம் ஆகையால் ஊனுடலை நான் என்று தீர்மானிக்கும் வடிவவிருத்தியே அகங்காரமாகும். இது செயல்களின் காரணகாரிய அவசியத்தை ஆழ்ந்து ஆலோசிக்காமல் 'நான்'' 'எனது' என்று தீர்மனரத்தில் முனைந்து கொண்டு பாவபுண்ணியங்களைச் செய்து கொண்டிருக்கும். இதன் அதிதேவதை உருத்திரன். ஸ்தானம் இருதயம்.

ஆகவே மேற்கூறிய நான்கும் உடலில் வியாபித்து ஞானேந்திரியங்களையும், கர்மேந்திரியங்களையும் காரிய விருத்திகளில் அழுத்துகிறது.

இவ்வைந்து பூதங்களே, அண்ட வெளியிலும், பூமியின் பரப்பிலும், மனிதனுக்குள்ளும், காலங்களையும், அக்காலத்திற்கேற்ற ஒழுக்கம், உணவு, பழக்கம், சுவை இவைகளை உண்டாக்குகிறது.

ஆவணி, புரட்டாசியில் கார்காலம். இந்த காலத்தில் பூமியின் சீதோஷ்ணம், காற்று செடி கொடிகள் இவைகளும் அதன் காலக் குணத்தைப் பெறுகிறது.

ஐப்பசி, கார்த்திகையில் கதிர்காலம். இதனால் அண்டபிண்டங்களில் ஏற்படும் மாற்றம் இடத்திற்குத் தக்கவாறு வேறுபடுகிறது.

மார்கழி, தை இம்மாதம் முன்பனிக்காலமாகி, பூமியில் வளர்ச்சியும், சுவையில் மாற்றமும் ஏற்படுகிறது.

மாசி, பங்குனி பின்பனிக் காலமாகி பூமி உணவுக் கொள்கை தாவரங்கள் இவைகளில் மாற்றம் ஏற்படுகிறது.

சித்திரை, வைகாசி இளவேனில் காலம். இதில் உணவுக் கொள்கை பழக்க வழக்கங்களில் பெரும் மாற்றம் ஏற்படுகிறது.

ஆனி, ஆடி முதுவேனில் காலம். இந்தக்காலங்களை ருது காலம் என்கிறோம். இதன் மாற்றங்களால், மனம், உடல், உணவு பழக்க, வழக்கங்கள் நமக்கு மாறுகிறதை மறுக்க முடியாது. ஆறு சுவைகளான இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, கார்ப்பு, துவர்ப்பு, இவைகளில் வைத்தியக் கொள்கை அடங்கி நிற்கிறது. வாதம், பித்தம், சிலேத்துமம், அதே போன்று சத்வ குணம், ரஜோ குணம், தாமஸ குணம், இப்படி சுவைபேதங்கள்.

இனிப்பு சுவை மண்ணிலும், நீரிலும் இருக்கிறது
புளிப்புச்சுவை மண்ணிலும், தீயிலும் இணைகிறது
உவர்ப்புச்சுவை தண்ணீரிலும், தீயிலும் ஏற்படுகிறது.
கசப்புச்சுவை காற்றிலும், ஆகாயத்திலும் உருவாகிறது
காரச்சுவை தீயிலும், காற்றிலும் உண்டாகிறது.
துவர்ப்புச்சுவை மண்ணிலும், காற்றிலும் கிடைக்கிறது.

ஆகவே இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது உலகத்திலே எப்பொருளிலும் பஞ்சபூதத்தின் ஆட்சியே பிரதானமாக உள்ளது. ஆகவே மனிதன் பஞ்ச பூதத்தின் ஆட்சிக்கு உள்ளாகிறான். மனிதன் உள்ளிலும், மனிதனுக்கு வெளியிலும், அண்ட வெளியிலும் எங்குமே பஞ்ச பூதத் தத்துவம்.

ஆகவே இந்த 5 பூதங்களைக்கொண்டு உலகத்தை நீங்கள் உங்கள் ஆட்சிக்குக்கொண்டு வந்து விடலாம். இந்த பூதங்களை உங்கள் வழிக்கு நீங்கள் திருப்பிக் கொள்ளுங்கள்.

ஆகவேதான், தமிழ் முறை என் கணிதத்திற்கு ஐந்து எண்களே போதும். இந்த ஐந்து எண்களே உலகத்தின் அடிப்படையும், ஆதாரமும். நமது தமிழ் முறை எண் கணிதத்திற்கு ஒன்று முதல் ஐந்து எண்களின் குணங்களையும் அதன் ஆற்றல்களையும் புரிந்து கொண்டாலே போதும்,

இனி தமிழில் உள்ள 247 எழுத்துக்களையும் நாம் ஐந்து பிரிவாகப் பிரித்துக்கொண்டு ஐந்து பிரிவுகளின் சிறப்பு அம்சங்களை இனி விளக்குவோம்.

இது வரையிலும் உலகத்தை இயக்கி நடத்துவது பஞ்சபூதங்களே என்று மேலெழுந்த வாரியாகப் பார்த்தோம். அதன் படி பஞ்சபூதங்களே மனிதனின் உள்ளும் வெளியும் ஆட்சி நடத்திகின்றன. அதற்கு மனிதனுடன் அண்ட வெளியில் உள்ள அத்தனையும் ஆட்பட்டே தீரவேண்டும். நட்சத்திரங்களும், கிரகங்களும் ராசி வட்டங்களும் பஞ்சபூதக் குணத்தைப் பெற்று அதன் அதன் கிருத்தியங்களை மனிதனின் மேல் செலுத்துகிறதினால், மனிதன் அதற்கு உட்பட்டவனாகிறான் என்பதுவே நமது கொள்கை.

இனி தமிழ் முறை என் கணிதத்திற்கு நமக்குப் போதிய எண் ஐந்தே என்பது தீர்மானமாகி விட்டது. இந்த ஐந்தும் பஞ்சபூதத்தின் எண்களே. பஞ்சபூதத்தை வரிசைப் படுத்தினால்

ஒன்று — பிருதிவியாகிய மண்

இரண்டு — அப்புவாகிய நீர்

மூன்று — தேயுவாகிய நெருப்பு

நான்கு — வாயுவாகிய காற்று

ஐந்து — ஆகாயமாகிய சுத்தவெளி

இந்த ஐந்தின் வரிசைக்கு தமிழில் உள்ள 247 எழுத்துக்களையும் பிரித்தால் போதுமானதே. தமிழில் உள்ள 247 எழுத்துக்களும் ஐந்தில் அடங்கி விடும்! ஆச்சரியமாக இருக்கிறதா? ஐந்தில் அடங்காதது ஐம்பதில் அடங்குமா? என்பது பழமொழி. ஐந்து என்பது பஞ்சபூதம். ஐந்து என்பது பஞ்சபூதத்தின் எழுத்து. ஐந்து எழுத்து மந்திரம் என்பது பஞ்சபூத ரகசிய தந்திரம். இறைவனின் எழுத்து ஐந்து. ஆகவே ஐந்து எழுத்துக்களுமே மற்ற 242 எழுத்துக்களாக விரிந்து நிற்கும். இறைவனும், பஞ்சபூதமும் எங்கும் வியாபித்து இருப்பது போலவே ஐந்து தமிழ் எழுத்துக்கள் மற்ற 242 எழுத்துக்களாக விரிந்து கிடைக்கும் என்பதைப் பார்ப்போம். இதே ஐந்து எழுத்துக்களும் உலக மொழிகள் அனைத்திலுமே கலந்து நிற்கும்.

தமிழ் எழுத்துக்கள் விபரம் :

மொத்தம் தமிழில் எழுத்துக்கள் உள்ளது 247

| | |
|---|---|
| தமிழில் உயிர் எழுத்து 'அ' முதல் 'ஔ' வரை மொத்தம் | 12 |
| மெய்யெழுத்து 'க்' முதல் 'ன்' வரை | 18 |
| உயிர்மெய் எழுத்துக்கள் 'க' முதல் 'னௌ' வரையிலும் | 216 |
| ஆயுத எழுத்து ஃ ஒன்று | 1 |
| ஆக மொத்தம் எழுத்துக்கள் | 247 |

உயிர் எழுத்து மொத்தம் பன்னிரண்டில் அ, இ, உ, எ, ஒ—இவை ஐந்தும் உயிர் குறில் எழுத்துக்கள், ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ—இவைகள் உயிரும் மெய்யும் சேர்ந்த உயிர் நெடில்.

இப்பொழுது 18 மெய்யெழுத்துடன் மேலே கூறிய ஐந்து உயிர்க்குறில் தனித்தனியே சேர்ந்தால் $18 \times 5 = 90$ உயிர் மெய் குறிலாகும்.

**உயிர் மெய் குறில் உதாரணம் :**

க் + அ — க

க் + இ — கி இவைபோல

இந்த 90 உயிர்மெய் குறிலோடு தனித்தியங்கும் ஐந்து உயிர் குறிலையும் சேர்த்தால் 90+5—95 ஆகிறது.

இனி 18 மெய் எழுத்துகளோடு ஏழு உயிர் நெடில் தனித்தனியே சேர்ந்தால் 18 × 7 — 126 உயிர் மெய் நெடிலாகும்.

**உயிர்மெய் நெடில் உதாரணம் :**

க் + ஆ — கா

க் + ஈ — கீ

க் + ஊ — கூ இவை போல

ஆக உயிர் மெய் நெடில் 126 உடன் தனியே இயங்கும் நெடில் ஏழையும் சேர்த்தால் 126+7—133 நெடில் ஆகிறது.

உயிர்மெய் குறில் உதாரணம் க, கி, கு, கெ, கொ, உயிர்மெய் நெடில் உதாரணம் கா; கீ, கூ, கே, கை கோ, கௌ, இதேபோலவே மற்ற உயிர்மெய் எழுத்துக்களையும் இவ்வாறு கொள்ளவேண்டும்.

இனி மெய்யெழுத்து 18 ஆயுத எழுத்தாகிய ஃ 1-ம் சேர்த்துக்கொள்ள 18+1=19-ம் ஒற்று எழுத்து எனப்படும்.

| | |
|---|---|
| ஆக தமிழில் குறில் மொத்தம் | 95 |
| நெடில் மொத்தம் | 133 |
| ஒற்று எழுத்துக்கள் | 19 |
| ஆக மொத்தம் எழுத்துக்கள் | 247 |

இந்த 247 மொத்த தமிழ் எழுத்துக்களிலும் அ, இ. உ, எ, ஒ இந்த ஐந்து உயிர்க்குறில் எழுத்துக்களே, எல்லாவற்றிலும் உயிராகக் கலந்து நின்று இயங்குகிறது. இவைகளே எல்லாவற்றிலும் ஊடுருவி பிராணனாக ஜீவனாக கலந்து ஒளிக்கிறது. இந்த ஐந்து உயிர்க்குறில்களே உடம்புபெற்ற மெய்யெழுத்து பதினெட்டுடன் கூடி உயிர்குறில்களாகவும், உயிர் நெடில்களாகவும் உயிர் மெய்யாகவும் இயங்குகிறது. க என்னும் போது அதில் 'அ' வே உள்ளது. இது எப்படி உண்டானது. க் என்னும் மெய்யோடு அ என்னும் உயிர் சேர்ந்து 'க' என்று ஜனனமானது. கி என்னும் போது க் இ சேர்ந்து கி ஆகிறது. கு என்னும் போது க் உ சேர்ந்து கு ஆகிறது. கே என்னும் போது க் எ சேர்ந்து கே ஆகிறது. கோ என்னும் போது க் ஒ சேர்ந்து கோ ஆகிறது. ஆகவே தான் அ, இ, உ, எ, ஒ, என்ற இந்த ஐந்து எழுத்துக்களுமே 242 எழுத்துக்களை இயக்கும். ஆகவே இதை விளங்கிக் கொண்டால் போதுமானதே. நமக்கு தமிழ் முறை எண் கணிதத்திற்கு அ, இ, உ, எ, ஒ, மட்டும் தெரிந்து கொண்டால் மற்ற 242 எழுத்துக்களையும் இந்த ஐந்தின் வரிசையில் அடக்கி விடலாம். உலக மொழிகளின் ஒலிகளிலேயும் இவைகளைக் காண முடியும்.

## அ

1. ஆகவே, பிருதிவியாகிய முதல் பூதத்திற்கு அதாவது மண் பூதத்திற்கு அ-ஆ-ஐ-ஔ இந்த உயிர்களும்

இவை ஏறின க - கா - கை - கௌ முதலிய உயிர்மெய் எழுத்துக்களும் 'அ' வரிசையில் அடங்கி இதை ஒன்று என்ற பிருதிவி பூதமாகிய மண் தத்துவத்தில் நிறுத்து வோம். இத்துடன் வடமொழி எழுத்தாகிய ஷ, க்ஷ ஸ, ஜ ஆகியவைகளும் அடங்கும். இதில் ஆயுத எழுத்தான ஃம் சேர்ந்து மொத்தம் 81 எழுத்துக்களாகிய முதல் அணியில் நிற்கும் அ - 1.

இ

2. இனி இ, ஈ இவ்வுயிர்களும் இவை ஏறின கி, கீ. முதலிய உயிர்மெய்களும் 'இ' வரிசையில் அடங்கி இதை இரண்டாம் அணியில் நிறுத்துவோம். இந்த வரிசையில் மொத்தம் 57 எழுத்துக்கள் அடங்கும். 'இ' என்பது அப்பு பூதமான நீரின் எழுத்து. இ - 2

இத்துடன் க்ஷி, ஷி, ஜி, ஸி நான்கும் அடங்கும்.

உ

3. உ - ஊ இவ்வுயிர்களும் இவை ஏறின கு, கூ, முதலிய உயிர்மெய்களும் 'உ' வரிசையில் நிறுத்து வோம். இந்த வரிசையில் மொத்தம் 38 எழுத்துக்கள் அடங்கும். 'உ' தேயு பூதமான தீயின் எழுத்தாகும். உ - 3 வடமொழி நான்கும் அடங்கும்.

எ

4. எ - ஏ இவ்வுயிர்களுக்கும் இவை ஏறின கெ, கே முதலிய உயிர்மெய்களும் 'எ' வரிசையில் அடக்கி இதை நான்காம் அணியில் நிறுத்துவோம். இதில் மொத்தம் 38 எழுத்துக்கள் அடங்கும். 'எ' என்பது வாயு பூத மான காற்றின் எழுத்தாகும். எ - 4

வடமொழி நான்கும் அடங்கும்.

ஒ

5. ஒ - ஓ இவ்வுயிர்களும் இவை ஏறின கொ கோ முதலிய உயிர்மெய்களும் 'ஒ' வரிசையில் சேர்த்து ஐந் தாம் அணியில் நிறுத்துவோம்.

இதிலும் மொத்தம் 38 எழுத்துக்கள் அடங்கும். 'ஒ' என்பது ஆகாய பூதமாகிய வெளியின் எழுத்து. வடமொழி நான்கும் அடங்கும் ஒ—5.

இதுவரையில் பஞ்சபூதங்களைத் தேர்ந்தது போலவே தமிழ் எழுத்துக்கள் 247ல் 5 எழுத்துக்களை தேர்ந்து எடுத்துக்கொண்டோம். 247ல் 5 போக மீதி 242ம் ஐந்தின் மதிப்பீட்டுக்குள்ளேயே அடங்குகிறது. ஆகவே, இதை நினைவில் வைத்துக்கொண்டால் எந்த எழுத்துக்கும் மதிப் பீட்டை கொடுக்க முடியும். ஆகவே இப்பொழுது

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அ | 1 | — | இது பிருதிவி | — | மண் |
| இ | 2 | — | இது அப்பு | — | நீர் |
| உ | 3 | — | இது தேயு | — | தீ |
| எ | 4 | — | இது வாயு | — | காற்று |
| ஒ | 5 | — | இது வெளி | — | ஆகாயம் |

இதில் 1, 2, அதாவது மண், நீர், இரண்டும் பெண்பால். தீ, காற்று, ஆகாயம் அதாவது 3, 4, 5 இம்மூன்றும் ஆண் பால்.

இந்த ஐந்து பூதங்களும் பிருதிவி—மண் ஆகாயம் இவைக்குள் அடங்கும். இதுவே ஐந்துக்கு இரண்டு பழுதில்லையென்பது பழமொழி. இந்த இரண்டினுள் எல்லாம் அடங்கியே தீரும். பிருதிவியானது தோற்றுவிக்க மற்றவைகள் வளர்த்துவிக்கும். பிருதிவி தோற்றுவிக்க மற்ற தாது, தாவர சங்கமங்கள் தேவர், நரர், மக்கள் யாவரும் தோன்றுவர்.

மீண்டும் இவைகளை நினைவில் கொள்ள வேண்டி வரிசைப்படுத்தித் தருகிறேன். எழுத்துக்கள் 247 இத்துடன் நான்கு சம்ஸ்கிருத எழுத்தான க்ஷ, ஷ, ஸ, ஜ இவைகளும் சேர 247+4—251. இந்த 251 யையும் 5 பட்டியலாக்கிப் பார்ப்போம்.

1. 81 பிருதிவி—மண் எழுத்து அ. எண். 1
வடமொழி 4

அ க ங ச ஞ ட ண த ந ப
ம ய ர ல வ ழ ள ற ன ஃ
ஆ கா ஙா சா ஞா டா ணா தா நா பா
மா யா ரா லா வா ழா ளா றா னா
ஐ கை ஙை சை ஞை டை ணை தை நை பை
மை யை ரை லை வை ழை ளை றை னை
ஔ கௌ ஙௌ சௌ ஞௌ டௌ ணௌ தௌ
நௌ பௌ மௌ யௌ ரௌ லௌ வௌ ழௌ
ளௌ றௌ னௌ
க்ஷ ஷ ஸ ஜ

2. 57 அப்பு—நீர்—எழுத்து—இ எண். 2

இ கி ஙி சி ஞி டி ணி தி நி பி
மி யி ரி லி வி ழி ளி றி னி
ஈ கீ ஙீ சீ ஞீ டீ ணீ தீ நீ பீ
மீ யீ ரீ லீ வீ ழீ ளீ றீ னீ
க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப்
ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன்
க்ஷி ஷி ஸி ஜி

3. 38 தேயு—தீ—எழுத்து உ எண் 3
வடமொழி—4

உ கு ஙு சு ஞு டு ணு து நு பு
மு யு ரு லு வு ழு ளு று னு

ஊ கூ ஙூ சூ ஞூ டூ ணூ தூ நூ பூ

மூ யூ ரூ லூ வூ ழூ ளூ றூ னூ

க்ஷூ ஷூ ஜூ ஸூ

4. 38. வாயு—காற்று (எழுத்து எ. எண்—4 வடமொழி 4)

எ கெ ஙெ செ ஞெ டெ ணெ தெ நெ

பெ மெ யெ ரெ லெ வெ ழெ ளெ றெ னெ

ஏ கே ஙே சே ஞே டே ணே தே நே

பே மே யே ரே லே வே ழே ளே றே னே

க்ஷே ஷே ஸே ஜே

5. 38. ஆகாயம் எழுத்து—ஒ, எண்—5. வடமொழி 4

ஒ கொ ஙொ சொ ஞொ டொ ணொ தொ நொ

பொ மொ யொ ரொ லொ வொ ழொ ளொ றொ னொ

ஓ கோ ஙோ சோ ஞோ டோ ணோ தோ நோ போ

மோ யோ ரோ லோ வோ ழோ ளோ றோ னோ

க்ஷோ ஷோ ஸோ ஜோ

மேலும் எந்த பாஷையின் எழுத்துக்களை உச்சரிக்கும் போது எவ்வொலி வருதோ அந்த மதிப்பை அளிக்க வேண்டியது. ஆகவே உலக மொழி அனைத்தும் இந்த ஐந்து பிரிவில் நிச்சயம் அடங்கும். வரிவடிவு, எழுத்து வடிவு வேறாக இருக்கலாம். ஆனால் ஒலி வடிவம் இதில் அடங்கும்.

இதுவரையிலும் ஐந்து பூதங்களின் ஆட்சி பற்றியும் தமிழ் எழுத்துக்களை ஐந்து பூதங்களுக்கும் பகிர்ந்து கொடுப்பது பற்றியும் பார்த்தோம். இனி பஞ்ச பூதங்களுக்கு ஒன்பது கிரகங்களையும், 27 நட்சத்திரங்களையும் 12 ராசிகளையும் வாரத்தின் ஏழு நாட்களையும் பகிர்ந்தளிக்க வேண்டும்.

பஞ்ச பூதங்களுக்கு நவகிரகங்களை பகிர்ந்தளிப்பது பற்றி பல நூல்கள் பல விதமாகக் கூறுகின்றன. இதில் குமாரசாமியம், சிநேந்திரமாலை இவை இரண்டும் கூறும் கருத்துக்களை நமது தமிழ் முறை எண் கணிதத்திற்கு ஏற்றுக் கொள்ளலாம்.

சந்திரனே தாயாகத் தாழ்வில் கதிர் தந்தையாய்
வந்துதித்த பொன் வெள்ளி சேய் மாது — மந்தனு
மெய்முறையே மண்ணீர் தீக்காலிவற்றோடாகிய
மெய் வாய், கண், மூக்குச் செவி.

என்ற இந்தச் சிநேந்திரமாலைப் பாடலால், சூரியன் தந்தையாகவும், சந்திரன் தாயாகவும் அச்சூரிய சந்திரர் களிலிருந்து உதித்து வந்துள்ள அங்காரகன் முதலிய கோட்கள் ஐந்தினுள் குரு பிருதிவியும், சுக்கிரன் அப்புவும். அங்காரகன் தேயுவும் புதன் வாயுவும், சனி ஆகாயமு மாகிய ஐம்பூதமாம் என விளங்கப் பெறுகிறது.

ஆங்காரி ஓரறிவாம் ஈறறிவுமால் சேய் மூன்று
ஓங்குபுகர் நான்கறிவா மொண் பொன்ன னீங்கைந்து
மிக்கு செவி மூக்கு கண் வாய் மெய்யா மிவற்றி
னொக்கு முறையே யுரை.

என்ற இச்சிநேந்திரமாலைப் பாடலால் சனி மெய்யறி வாகிய ஓரறிவும், புதன் மெய், வாய் ஆகிய ஈறறிவும், செவ்வாய் மெய், வாய், கண் என்ற மூன்றறிவும், சுக்கிரன் மெய், வாய், கண் மூக்கறிவாகிய நான்கறிவும், குரு மெய், வாய், கண், மூக்கு, செவி அறிவாகிய ஐந்தறிவும் உடையவனென்று இப்பாடல் விளக்குகிறது.

இதிலிருந்து மண்ணிற்கு ஐந்து குணமும், நீரிற்கு நான்கு குணமும், தீயிற்கு மூன்று குணமும், காற்றுக்கு இரண்டு குணமும், ஆகாயத்திற்கு ஒரு குணமும் உடையது என்றும் தெரிய வருகிறது.

குமாரசாமிய நூலில் குரு பிருதிவி என்றும், சுக்கிரன் அப்பு என்றும், செவ்வாய் தேயு என்றும், புதன் வாயு என்றும், சனி ஆகாயம் என்றும், இவற்றிற்கு மேல் சூரியனும், இவற்றிற்கு கீழ் சந்திரனும் ஆதாரமாக உள்ளனர் என்றும் கூறுகிறது.

மேலும் இந்நூல் சுக்கிரன் சப்தம் என்றும், சனி பரிசம் என்றும், செவ்வாய் ரூபம் என்றும், புதன் கந்தம் என்றும், குரு ரசம் என்றும், சூரியன் அறிவு என்றும், சந்திரன் மனம் என்றும் கூறப்பெறுகிறது.

சூரியன், சந்திரன் குறித்து எல்லா நூல்களும் ஒரே விதமான கருத்துக்களை மாறாமல் உறுதியாகச் சொல்லுகிறது. சூரியனும், சந்திரனும் உலகிற்குத் தாயும், தந்தையும் போன்றவர்கள் என்பது உண்மையே. பூமியில் உற்பத்தியாகும் சராசரப் பொருள்கள் எல்லாம் சூரிய சந்திரர்களாலேயே விருத்தி ஆகின்றன. இதனை 'உள்ளீரவி மதியாகி நின்றுலகமெல்லாம் நடத்தும்" என்ற திருவருட் பிரகாசராகிய வள்ளலார் திருவாக்கு உணர்த்துகிறது.

அதாவது ஒரு வித்து பூமியில் விழுந்தால் அதனைச் சந்திரனுடைய குளிர்ந்த கதிர்களானது நனைத்துப் பசையாக்கி அதைப் பெருக்கச் செய்து பூமியின் சத்துடன் கலக்க செய்யும். சந்திரனுடைய குளிர்ந்த கதிரும், பூமியின் சத்தும் சேர்ந்து இந்த இரண்டின் சக்தியால் அந்த வித்தில் இருந்த வேர் தோன்றி பூமியை துளைத்துக் கொண்டு கீழே செல்லும். மேலும் சந்திரன் அந்த வித்திற்கு தனது குளிர்ந்த அமிர்தம் போன்ற கதிரினால் புஷ்டியை உண்டாக்கி விருத்தியடையச் செய்யும். இதனால் அந்த வேர் வளர்ச்சியை அடைந்து பூமியில் ஊன்றி நிலைத்து அதன் மூலமாக நீரைப் பருகி செழித்து ஓங்கி வளரும். இதனால்தான் சந்திரன் சராசரப் பொருள்களுக்குத் தாயைப் போன்றதாகிறது.

சூரிய கிரணமானது அந்த வித்துக்குள் சூட்சுமமாக அடங்கி இருக்கும் ஆன்மசக்தியை மேலே இழுக்கும். அப்போது முளையானது மேலே தோன்றும். அந்த முளையானது சூரியனின் கதிரால் இலகுவாகி, கொழுந்துகளாகவும் இலைகளாகவும், கிளை அல்லது கொடிகளாகவும் விருத்தியாகும். இதனால்தான் சூரியன் சராசரப் பொருள்களுக்கு தந்தையைப் போன்றதாகும்.

மேலும் சூரியனுடைய கதிர்களானது பூமியிலுள்ள நீர் நிலைகளிலிருந்து தண்ணீரை வெப்பத்தால் ஆவி ரூபமாக கிரகித்து மேகத்தை உண்டாக்கி ஒளி வடிவாக மழையைப் பெய்யச் செய்கிறது. இந்த மழையின் ஆதாரத்தினாலேயே செடி கொடிகள் மரங்கள், பயிர் பச்சைகள் விருத்தியடைந்து இதன் பலன்கள் உணவு வகைகளாகி உயிர் வர்க்கங்கள் உண்டு, தசை சக்திகளுண்டாகி உயிர் வாழ்கின்றன.

''ஆதித்தாத் ஜாயுதே வ்ருஷ்டி'' என்று கீதையிலும், ''ஆதித்யாஜ் ஜாயதேவ் ருஷ்டீர் விருஷிடோரந்நம் தத: ப்ரஜா'' என்ற மனு ஸ்மிருதி சுலோகப்படி ஆத்தும காரனான சூரியனுடைய பலாபலத்தைக் கொண்டுதான் ஆத்மா நடைபெற்றுக் கொண்டு வருகிறது. சூரியனில் ஒரு விதமான அக்கினி இருக்கிறது. அந்த அக்கினியே மனித சரீரத்தில் ஜீவாக்கினி, சடராக்கினி, கோபாக்கினி, தாபாக்கினி போன்ற அக்கினியாக பரவி உடம்பை இயங்கச் செய்கிறது. உண்டவைகளைச் சீரணிக்கச் செய்து அதனால் உடம்பிற்கு பலத்தை உண்டாக்குகிறது. சூரியனுடைய தேஜசாகிய ஒளிக்கதிர் சந்திரனிலும், ஏனைய கிரகங்களிலும், பூமியிலும், பூமியிலுள்ள சகல வஸ்துகளிலும் வியாபித்து பிரகாசிக்கச் செய்கிறது. சூரியனுடைய இந்த தேஜசில் பல குண பேதங்கள் இருக்கிறது. அதிகாலை வெய்யிலினால் உற்சாகமும், ஆயுள் விருத்தியும் உண்டாகின்றன. சூரிய, சந்திரர்களாலேயே பருவ காலமும், சீதோஷ்ண நிலைமாற்றமும் உண்டா

கிறது. இந்த மாற்றங்களைக் கொண்டே சகல வளர்ச்சிகளும், சிதைவுகளும் உண்டாகின்றன. இதனால் அண்டமாகிய ஆகாய வெளியிலே இக்கிரகங்களின் சுழற்சியால் பூமியிலே மாற்றங்கள் நிகழுவதற்கு மரஞ் செடி கொடிகளின் மாற்ற வளர்ச்சிகளும், கிரணங்களின் குளிர்ச்சி வெப்பங்களும், இதனால் ஜீவ இனங்களில் ஏற்படும் வளர்ச்சி, ருசி, பருவ கால தேவைகள் அந்தந்த காலங்களுக்கு ஏற்றபடி இயற்கையாக மனதிற்கும், உடம்பிற்தும் தேவைப்படுகிறது என்பது உறுதி.

ஆகவே ஏழு முக்கிய கிரகங்களில் சூரியன், சந்திரன் போக மற்றைய ஐந்து கிரகங்களை ஐந்து பூதங்களுக்கும் பங்கிட்டு இருக்கிறார்கள். இந்த பங்கீட்டில் தான் சிலர் குருவை பிருதிவிக்கும், சிலர் செவ்வாயை பிருதிவிக்கும், சிலர் புதனை பிருதிவிக்கும் கூறுகின்றனர். மற்ற கிரகங்களை சரியாக அந்தந்த பூதங்களுக்கு கூறி இருக்கின்றனர். ஆக நமது ஆய்வு பிருதிவிக்கு எந்தக் கிரகத்தை முடிவு செய்வது என்பதே. சூரியனை தேயுவாகிய தீக்கும், சந்திரனை அப்புவாகிய நீருக்கும் எல்லா நூல்களும் கூறுகிறது.

'அழலின் தன்மையாகுமால் அலைவாய் முகட்டின்
எழுபரிதி
வழியும் புனலின் தன்மையாம் வயங்கும்
ஒளிகால் வட்டமதி,

என்ற இலிங்க புராணப்பாடல் சூரியனை தீயின்' வெம்மைக்கும் சந்திரனை நீரின் தண்மைக்கும் கூறுகிறது. வடமொழி நூல்களும் இதே கருத்ஸை கூறுகிறது.

''ஸீர்ய க்ரஹ அதிதேவதாம் அக்நிம் ஸாங்கம் ஸாயுதம் ஸவாஹநம் சக்தி பத்நி புத்ரபரிவார

ஸமேதம் ஸிர்ய க்ரஹஸ்ய த க்ஷ் ண த: அக்நிம் ஆவாஹயாமி'' என்று சூரியனையும்,

'சந்த்ரக்ரஹ அதிதேவதா ஆப: சந்த்ரக்ரஹஸ்ய த க்ஷி ண த: ஆப: ஆவாஹயாமி' என்பதினால் சந்திரன் அப்பு சம்பந்தமான நீர் கிரகம் என்றும் உறுதி படுத்தப் பெறுகிறது.

இனி குரு, செவ்வாய், புதன், இந்தக் கிரகங் களைப்பற்றி பல நூல்கள் பலவிதமாகக் கூறுகின்றன.

கண்ட பஞ்ச பூதமாய் நின்றவாறு
கருதுவாய் செவ்வாயே தேயுவாகும்
மிண்டிய சுக்கிரன்றான் அப்புவான பூதம்
மேலான ஆகாயம் குருவதாகும்
கொண்டிருந்த பிருதிவியே புந்தியாகும்
குலவிய நுதல்மாதே கூறக்கேள் நீ
கொண்டதொரு காற்றுருவம் ஆனபூதம்
கோதுற்ற சனி யென்றே குறித்தார் மேலோர்

என்று சாதக அலங்காரம் கூறுகிறபடி செய்வாய் தேயு, புதன் —பிருதிவி, குரு ஆகாயம், சுக்கிரன் அப்பு, சனி வாயு என்று உணர்த்தப் பெறுகிறது. இதன்படி செவ்வாய் தீ என்றும், குரு ஆகாயம் ஏன்றும், புதன் மண் என்றும், சனி வாயு என்றும் ஆகிறது.

இதையே வராகமிகிரர்

சி கி—பூ—க பய: மருத்கனா நாம் வசிநோ பூமி ஸூதாதய: க்ரமேண' என்ற சுலோகத்தில் செவ்வாய் தேயு, புதன் பிருதிவி, குரு ஆகாயம், சுக்கிரன் அப்பு, சனி வாயு என ஜாதக அலங்காரக் கருத்தை இவர் கருத்தும் ஒத்துக் கொள்கிறது.

மேலும்

அங்காரக க்ரஹ அதிதேவதாம் ப்ருதிவீம்
அங்காரக க்ரஹஸ்ய தக்ஷிணத: ப்ருதிவீம்
'ஆவாஹயாமி'

என்ற சுலோகம் செவ்வாயை பிருதிவிக்கு ஒப்பிட்டுக் கூறுகிறது.

புதனை பூமியின் அம்சமாக சூரிய சித்தாந்தத்தில் கூறப்பெறுகிறது.

'அக்னி ஷோபாநு சந்தரௌத
தஸ்த வங்கார காதய:
தேஜோ புதாம் புவா தேப்ய:
கரமஸ, பஞ்ச ஜஜ்ஞிரே'

என்ற சுலோகப்படி அக்கினியிலிருந்து செவ்வாயும், பூமியிலிருந்து புதனும், ஆகாயத்திலிருந்து குருவும், நீரில் இருந்து சுக்கிரனும், வாயுவில் இருந்து சனியும் என்று விளங்குகிறது.

மேலும் பஞ்சபட்சி சாஸ்திரத்தில் ரோமரிஷி பிருதி விக்கு குருவையும், சுக்கிரனுக்கு அப்புவையும், செவ்வா யுக்குத் தேயுவையும், புதனுக்கு வாயுவையும் சனிக்கு ஆகாயத்தையும் கூறுகிறார்.

இதே கருத்தை முதலிலே கூறிய சிநேந்திரமாலைப் பாடலும், குமாரசாமியமும் ஒத்துக்கொள்கிறது. ஆகவே சில நூல்கள் புதனை பிருதிவிக்கு கூறுகின்றதை நாம் எடுத்துக் கொள்ள முடியாது. குருவை பிருதிவிக்கு ஏற்றுக்கொள்ளலாம். செவ்வாயை பிருதிவிக்கு ஏற்றுக் கொள்ளலாம் சோதிட சாஸ்திரங்களும் செவ்வாயை பூமி காரகன் என்று கூறப்பெறுகிறது. சக உதிரகாரகன், சகோதரகாரகன் என்றும் பேசுகிறது. சில நூல்கள் செவ்வாயையும் குருவையும் பிருதிவிக்கு சொல்லுகிறது.

முடிவாக நாம் சிநேந்திர மாலை கருத்துப்படியும், குமாரசாமிய நூலின் கருத்துப்படியும், ரோம ரிஷி பஞ்ச

பட்சி சாஸ்திர கருத்துப்படியும் குருவையே பிருதிவிக்கு எடுத்துக்கொள்ளலாம். செவ்வாயை தேயுவில் நிறுத்தி விட்டு - மண்ணுக்குள் இருக்கும் அக்னியாகிய கர்ப்பச் சூட்டுக்கு செவ்வாயை வைத்துக் கொண்டால் போது மானதே. அதன்படியாக தமிழ் முறை எண் கணிதத்திற்கு பூதத்தின் ஆளுகைக்கு உட்பட்ட கிரகங்களாக வரிசைப் படுத்தினால்

பிருதிவியாகிய மண் தத்துவத்திற்கு குரு எண் — 1
அப்புவாகிய நீருக்கு—சந்திரன். சுக்கிரன்—எண் — 2
தேயுவாகிய தீயின் தத்துவத்திற்கு — சூரியன், செவ்வாய் கேது எண் — 3
வாயுவாகிய காற்று தத்துவத்திற்கு புதன் எண் — 4
ஆகாயமாகிய வெளிக்கு சனி, ராகு எண் — 5

எல்லாக் கிரகங்களைவிட சனியே உண்மையில் அதிக தூரத்தில் இருக்கிறான். அதனால் சனியை ஆகாய கிரகமாகக் கொண்டு விடலாம்.

இனி நட்சத்திரங்களை பஞ்சபூதங்களுக்கு பங்கிடுவோம்:

| பிருதிவி—1 | அப்பு—2 |
|---|---|
| 1. அசுவினி | 1. திருவாதிரை |
| 2. பரணி | 2. புனர்பூசம் |
| 3. கார்த்திகை | 3. பூசம் |
| 4. ரோகிணி | 4. ஆயில்யம் |
| 5. மிருகசீரிஷம் | 5. மகம் |
| | 6. பூரம் |

தேயு—3

1. உத்திரம்
2. அஸ்தம்
3. சித்திரை
4. சுவாதி
5. விசாகம்
6. அனுஷம்

வாயு—4

1. கேட்டை
2. மூலம்
3. பூராடம்
4. உத்திராடம்
5. திருவோணம்

ஆகாயம்—5

1. அவிட்டம்
2 சதயம்
3. பூரட்டாதி
4. உத்திரட்டாதி
5. ரேவதி

பஞ்சபூதங்களுக்கு ராசி:

பஞ்ச பூதங்களுக்கு 12 ராசிகளை பங்கிடுவது பற்றி சுகர் பெருநாடி ஜோதிட நூலில் கூறப்பட்டிருப்பதாவது: பிருதிவி, அப்பு, தேயு வாயு, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களில் சூன்யமாகிய ஆகாசத்தை நீக்கி மற்றைய நான்கு பூதங்களின் தன்மை இப்பன்னிரண்டு ராசி களிலும் அமைந்திருக்கின்றன. அவை ஆவன:

1 எண்

ரிஷபம்
கன்னி
மகரம் } பிருதிவி மண்

2 எண்

கடகம்
விருச்சிகம்
மீனம் } அப்பு நீர்

| 3 எண் | | 4 எண் | |
|---|---|---|---|
| மேஷம்<br>சிம்மம்<br>தனுசு | தேயு<br>தீ | மிதுனம்<br>துலாம்<br>கும்பம் | வாயு<br>காற்று |

மேலை நாட்டு ஜோதிட நூலும் நான்கு பூதங்களுக்கான ராசிகளையே மேற்கூறியபடி பிரித்துச் சொல்லுகிறது.

ஆனால் பஞ்சபட்சி சாஸ்திரத்துள் மேஷம், விருச்சிகம், சிம்மம், பிருதிவியாகிய வல்லுறு என்றும், மிதுனம், கடகம், கன்னி இவை நீராகிய ஆந்தை என்றும், தனுசு, மீனம் நெருப்பாகிய காகம் என்றும், துலாம், ரிஷபம் காற்றாகிய கோழி என்றும், மகரம், கும்பம், ஆகாயமாகிய மயில் என்றும் கூறப்பெறுகிறது. ஆக இவைகளை அனுசரித்து நாம் சுகர்பெரு நாடியில் கூறியபடி 12 ராசிகளையும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்று நான்கு பூதங்களுக்கு பகிர்ந்து கொடுத்து விடலாம். ஆகாயம் என்ற 5-ம் பூதம் எல்லா ராசிகளிலும் வியாபித்து ஆளும் தன்மையுடையதாக பாவிக்கவேண்டும். 5ம் எண் பூதம் இறை தத்துவமும், எங்கும் எதிலும் வியாபகமும், சமத்துவ நோக்கும் உள்ளதாக கொள்ளலாம். ஆகவே 5ம் எண் காரர்கள் எல்லா ராசிகளின் ஆதரவையும் அன்பையும் பெறுவார்கள். அவர்கள் எந்த ராசியையும் பகைக்க மாட்டார்கள் என்றும் எல்லா ராசியையும் நேசிப்பார்கள் என்றும் நினைவில் கொள்ளவேண்டும்.

## பஞ்ச பூதங்களுக்கு கிழமைகள் :

1. பிருதிவி — மண் — வியாழக்கிழமை
2. அப்பு — நீர் — வெள்ளி, திங்கள்
3. தேயு — தீ — ஞாயிறு, செவ்வாய்
4. வாயு — காற்று — புதன்கிழமை
5. ஆகாயம் — வெளி — சனிக்கிழமை

## பஞ்சபூதங்களுக்கு திதி:

1. பிரதமை, சஷ்டி, ஏகாதசி — பிருதிவி மண்
2. துவிதியை, சப்தமி, துவாதசி — அப்பு, நீர்
3. திருதியை, அஷ்டமி, திரயோதசி — தேயு தீ
4. சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி — வாயு காற்று
5. பஞ்சமி தசமி பௌர்ணமி — ஆகாயம் — வெளி.

## பஞ்சபூதங்களுக்கு ருதுக்கள்

### குரு - பிருதிவி

1. மார்கழி, தை ஹேமந்த ருது, முன் பனிக்காலம். இது பனியாலும் குளிராலும் பூமியில் மாற்றம் நிகழும் காலம். இது குரு பிருதிவியாகிய மண்.

### சுக்கிரன் - அப்பு

2. சித்திரை வைகாசி வஸந்த ருது. இளவேனில் காலம். இதில் மரம் செடிகளும் பூத்து தழைத்து வளரும். மன்மதனும், குயில் முதலிய பக்ஷிகளும் மனிதர்களும் சந்தோஷமாய் சுகப்படும் காலம். இது சுக்கிரனின் அப்பு.

### சந்திரன் - அப்பு

3. ஆவணி, புரட்டாசி வர்ஷ ருது. கார்காலம். இக் காலங்களில் மேகங்கள் மழைபொழியும். இது சந்திர னுக்கு உடையது.

### சூரியன் - செவ்வாய் - தீ

ஆனி, ஆடி முதுவேனில் காலம். இது உஷ்ணத்தால் பூமியில் சில பாதிப்புகளைச் செய்யும். சூரியன், செவ்வா யுக்கு உடையது.

## புதன் - காற்று

ஐப்பசி, கார்த்திகை குளிர் காலம். பனியாலும், குளிராலும் அண்டபிண்ட மாற்றங்கள் நிகழ்கிறது. இது புதனுக்குரியது.

## சனி - ஆகாயம்

மாசி, பங்குனி, பின்பனிக்காலம், குளிரால் தேகம் மாற்றம், மரங்களில் பூக்கள் பூக்கும் காலம். இது சனியுடையது.

இதுவரையிலும் பஞ்ச பூதத்தினுடைய ஆற்றல், அதன் வரிசைமுறை, தமிழ் எழுத்துக்களை 5 பூதத்திற்கு பங்கிடுதல், நட்சத்திரம், ராசி. கிழமை, திதி, காலங்கள் இவைகளை பஞ்சபூதரீதியாகப் பார்த்தோம். இவைகளை நன்றாக உணர்ந்து நினைவில் வைத்துக்கொண்டால் இனி தமிழ் முறை எண் கணிதத்தை தெளிவாக விளங்கிக் கொள்ளலாம்.

## தமிழில் எண் கணிதப் பலன் அறிவது எப்படி?

தமிழ்முறை எண் கணிதத்தில் பெயர்களுக்கு அல்லது ஊர்களுக்கு, வேறு ஸ்தாபனங்களுக்கான பெயர்களை தமிழில் எழுதி அதற்கான மதிப்பீட்டு எண்களை கொடுத்து அந்த மதிப்பெண்களை கூட்டி, அந்த கூட்டுத் தொகையின் மொத்தத்தை ஐந்து பூதங்களுக்கு பகிர்ந்தளித்த மீதியே அந்த பெயரின் அல்லது ஊர், ஸ்தாபனங்களின் சிறப்பு எண்ணாகும். ஆங்கில முறை எண் கணிதத்தில் மதிப்பீட்டு எண்களை கூட்டிக் கூட்டி ஒரு இன எண்ணாக்கி விடுகின்றனர். ஆனால் தமிழ் முறை எண் கணிதத்தில்—கூட்டுத் தொகையை ஐந்து பூதங்களுக்கு பங்கிட்ட மீதி ஆளுகைக்குட்பட்ட எண்ணாகும். ஆகவே தமிழ் முறையில் ஒரு ஐந்தின் மடங்கால் கொடுத்த மீதியே எண்.

பிறந்த தேதி எண்களை எப்படி கையாளுவது என்றால் வருஷம், மாதம், தேதியை கீழே குறிப்பிட்டபடி கணிதம் செய்யவேண்டும். உதாரணமாக ஒரு நபர் 25—08—1941-ல் பிறந்தார் என்று கொண்டால் அதை கீழ் வருமாறு கணக்கிட வேண்டும். உதாரணமாக:

பிறந்த தேதி 25—08—1941
பிறந்த தேதி, மாதம் வருஷம் ஆகியவற்றை கூட்டி 5-ல் வகுக்க வருவதே சிறப்பு எண்.

```
  1941
    25
     8
 ------
5)1974(394
  15
  ---
   47
   45
   ---
    24
    20
   ---
     4
```

இதுவே பிறந்த வருஷம் மாதம் தேதியின் சிறப்பு — எண்

மீதி எண் இல்லையானால் 25 ÷ 5 — 5 மீதியில்லாததினால் இந்த ஐந்தையே சிறப்பு எண்ணாக கொள்ள வேண்டும். எந்த கூட்டு எண்ணையும் 5-ல் வகுத்து மீதி 0 வந்தால் 5 எண்ணையே சிறப்பு எண்ணாக வைத்துக்கொள்ள வேண்டும்.

இனி ஒருவரின் வயதைக் குறிப்பிட்டு பலன் சொல்ல வேண்டுமானால் அவருக்கு நடைபெற்று வரும் ஆண்டை 5ஆல் வகுத்து வருகிற மீதியே நடைபெற்று வரும் ஆண்டின் சிறப்புப் பலனை கூறுவதாகும். இப்படிச் செய்வதினால் வயது வளர்ச்சிகளில் ஒவ்வொரு ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை, ஒரு மனிதனின் வாழ்வு அல்லது அவனது செயல், தொழில் இவைகளில் மாற்ற வளர்ச்சிகள் ஏற்பட்டிருக்கும். இது நல்லது கெட்டது என்ற படியும் வரலாம். வயது வளர்ச்சிகளில் ஒரு 5 ஆண்டு என்பது ஒரு பரிவிருத்தியாகும். இந்த 5 ஆண்டு களையும் பஞ்சபூத வரிசைப்படியே முதல் ஆண்டு பிருதிவியாகிய மண் தத்துவம் என்றும், இது குருவின் ஆதிக்கம் கொண்ட ஆண்டு என்றும், அடுத்து வரும் 2—ம் ஆண்டு அப்புவாகிய நீர் பூதத்தின் ஆண்டு என்றும், அடுத்து வரும் 3—ம் ஆண்டு தேயு பூதமாகிய நெருப்பின் ஆண்டு என்றும். இந்த ஆண்டில் சூரியன், செவ்வாய், கேது இவர்களின் ஆதிக்கம் உள்ள ஆண்டு என்றும், நான்காம் ஆண்டு வாயுவாகிய காற்றின் ஆண்டு என்றும், இந்த ஆண்டு புதனின் ஆதிக்கம் உள்ள ஆண்டு என்றும், ஐந்தாம் ஆண்டு ஆகாயத்தின் ஆண்டு என்றும் இது சனியின் ஆதிக்கம் உள்ள ஆண்டு என்றும் கொள்ள வேண்டும். இப்படி பிரித்து அறிவதினால் அந்த ஆண்டின் தெளிவான பலன்களை முடிவு செய்யலாம்,

உதாரணமாக ஒரு மனிதனுக்கு 42ம் ஆண்டு நடை பெறுகிறது என்று கொண்டால் $42 \div 5$ வகுக்க 8 தடவைகள் 5 அடங்கும், மீதி 2 வரும். இது எட்டு பஞ்ச பூத பரிவிருத்திகள் முடிந்து 9வது பரிவிருத்தி ஆண்டு ஆக ஒன்பதாவது பரிவிருத்தியில் அப்புவாகிய ஆண்டு நடைபெற்று வருகிறது. இந்த அப்புவாகிய ஆண்டில், சந்திரன், சுக்கிரன் இவர்களின் ஆதிக்கம் இருப்பதால்

அந்த நபர் தனது 42ம் வயதில் வீடுகட்டுதல், மனை யலங்காரம் செய்தல், மன சந்தோஷமான காரியங் களில் ஈடுபடுதல், குடும்பத்தில் திருமணம் ஆகிய காரியங்கள், வாகன விருத்திகள், கலைகளில் ஈடுபட்டு வெற்றியடைதல், நிலபுலன்களில் நீர் விருத்தி, திரவ ரூபப் பொருள்கள், ரசவர்க்க விருத்திகள், கேளிக்கை விநோத ஈடுபாடு என்று இப்படியாக நீர் தத்துவம், சுக்கிரன், சந்திரன் ஆகியவர்களின் காரகத்துவம், இவைகளை கருத்தில் கொண்டு பலன் சொல்லி வர அப்பலன்களை அவர்கள் பெற்று அனுபவிப்பர். ஆக ஒரு கூட்டுத் தொகை ஐந்தால் வகுக்கப் பெற்று வரும் மீதி எந்தப் பூதத்தினதோ, அந்த பூதத்தின் குணங்கள், அந்த பூத ஆதிக்கம் பெற்ற கிரகங்களின் குணாதிசயங் களை கூற வேண்டும். இதில் நல்ல பயிற்சியும் குழப்ப மற்ற தெளிவான முடிவுகளையும் கூற வேண்டும், அப்படிக் கூறும் முன்பு— பஞ்ச பூத இயல், கிரக இயல் இவைகளைத் தெரிந்து கொள்வது நலமே.

## ஒரு ஐந்து ஆண்டு பஞ்ச பூத பரிவிருத்தி

இன்னும் இதைப்பற்றி ஒரு உதாரணத்துடன் விளக்குகிறேன். ஒரு ஐந்து ஆண்டு என்பது ஒரு பஞ்சபூத பரிவிருத்தி. அதாவது, ஒரு பஞ்ச பூத ஆண்டு. உதாரண மாக ஒரு குழந்தை பிறந்தது என்றால் அதன் முதலாண்டு ஒன்று. அது மண்ணின் தத்துவம், குருவின் ஆதிக்கம். அக்குழந்தையை கண்ணே, மணியே என்று உயர்வாகப் புகழ்ந்து கொஞ்சுகின்றனர். உறவினர்கள் வந்து காணுகின்றனர். நல்ல முறையிலே கவனிக் கின்றனர். குழந்தையின் முதலாண்டு மண்ணின் தத்துவமானதால் அக்குழந்தை, தரையில் படுத்த வண்ணமும், உட்கார்ந்த வண்ணமும் போஷாக்குள்ள சத்து உணவுகளைச் சாப்பிட்டு உடம்பை வளர்க்கிறது.

மண் தத்துவமே உடம்பில் நரம்பு, எலும்பு, சதை, தோல், முடி என ஐந்தாக உள்ளதினால் இக்குழந்தைக்கு இவையெல்லாம் தேவைப்படுகிறது. ஆகவேதான் முதல் ஆண்டு குருவின் ஆதரவும் உடம்பிற்கு வலுவும் தேவைப்படுகிறது.

இரண்டாம் ஆண்டு அக்குழந்தையின் அப்பு தத்துவம் உள்ள ஆண்டாகிறது. இது சந்திரன், சுக்கிரனின் ஆதிக்கம் உள்ளது. இது தண்ணீரின் தத்துவம் ஆனதினால் குழந்தை ஒருஇடத்தில் நில்லாது ஓடவும், விழவும் உணர்ச்சி களைப் பெறவும், தாய்ப்பாசமும் ஏற்படுகிறது. நீர் தத்துவமே ரத்தம், பித்தம் மூளை, சுக்கில சுரோணிதம் ஆதலினால் குழந்தையின் மூளை வளர்ச்சி ஏற்பட்டு உடம்பை ஓரிடத்தில் நிற்காது இயக்குகிறது.

மூன்றாம் ஆண்டு நெருப்பு பூதத்தின் ஆட்சி. இது சூரியன், செவ்வாய், கேது, இவர்களின் கலப்பு ஆதிபத்தி யத்தைப் பெற்றதாகும். இந்த மூன்றாம் ஆண்டு நெருப்பு பூதத்தின் ஆட்சியானதால், குழந்தைக்கு தீட்சண்ய உணர்வுகள், கோபம், பசி, தாகம், காட்சியறிவு இவைகளில் மாற்றங்களை பெற்ற தனது சுபாவத்தைக் காட்டுகிறது.

அடுத்த நான்காம் ஆண்டு காற்றின் தத்துவம், இது புதனின் ஆதிபத்தியம் உள்ளதால் அறிவு, ஆசை. ஓடல், நடத்தல், நினைவு, மறதி, ஆகிய காற்றின் அம்சத்தை சேகரித்துக் கொள்கிறது. கேள்விகளில் பிரியம், உற்றுக் கேட்டல், சங்கீதம், நடனம் இவை களைக் கேட்டு ஆனந்தித்தல் ஆகிய குணங்களை குழந்தை பெறுகிறது. பழையவைகளின் மறதியும், புதியவைகளின் நினைவுகளையும் அ, ஆ போன்றவை களை மனதில் வைக்கவும் பழகுகிறது. அடுத்து வரும் ஐந்தாவது ஆண்டு ஒரு முழுமை பெறுகிறது. இது ஆகாய தத்துவம் சனியின்ஆதிக்கத்தைப் பெறுகிறது. இதன்

குணமான மதம், மாச்சர்யம், உலோபம் அகங்காரம் ஆகிய குணங்கள் குழந்தைக்கு ஏற்பட்டுவிடுகிறது. தான் யார் எனத் தெரியும் ஆற்றலும் வருகிறது. நன்றாக ஓடுகிறது. நடக்கிறது. ஆகாயத்தைப் போன்று சிந்தனை விரிகிறது. உணர்ச்சிகளின் பொருளை விளங்கிக்கொள் கிறது. பிறருடைய கோபத்தை வெறுப்பை, விருப்பை இன்னதென யோசித்து முடிவு கண்டு அதன்படி நடக்கிறது. ஆகவே ஒரு ஐந்து ஆண்டுகளில் அதனுடைய வளர்ச்சி பஞ்ச பூதங்களின் பரிணாமத்திற்கு ஏற்ப குழந்தையின் உடலும், குணமும் மாற்றம் பெறுகிறது. இனி அடுத் தடுத்து வரும் பஞ்சபூத பரிவிருத்திகளில் 6, 7, 8, 9, 10 ஆகிய ஆண்டுகளில் உடல் வளர்ச்சி, உணர்வுகள், வலிமை, படிப்பறிவு, நாகரீகம், தன்னுடையது, பிறருடை யது என்ற பாகுபாடுகளை உணர்ந்து கொள்கிறது. இவைகளே பஞ்சபூதம். அண்டத்திலும், மனிதனாகிய பிண்டத்திலும் மாற்ற நிகழ்ச்சிகளை மேற்கூறிய வண்ணம் செய்து வருகிறது.

இந்த மாற்ற வளர்ச்சிகளில் முதல் ஐந்து வருடம் மண்ணின் பரிவிருத்தி என்றும், இரண்டாம் ஐந்து வருடம், நீரின் பரிவிருத்தி என்றும், மூன்றாம் ஐந்து வருடம் தீயின் பரிவிருத்தி என்றும், நான்காம் ஐந்து வருடம் காற்றின் பரிவிருத்தி என்றும் ஐந்தாம் ஐந்து வருடம் ஆகாயத்தின் பரிவிருத்தி என்றும் பிரித்து அந்தந்த பரிவிருத்தி ஆண்டுகளில் அதன் உட்பிரிவுகளான மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற கணக்கின்படி அந்தந்த பூதத்தின் கிரகங்களின் குணங்களையும் மாற்ற வளர்ச்சிகளையும் காலத்திற்கு ஏற்றாற் போல கொடுக்கும் என்பதை ஆலோசித்து முடிவு காண வேண்டும்.

## ஒரு தினத்தின் ஐம்பூதப்பிரிவு

ஒரு நாள் என்பது 60 நாழிகை அதாவது 24 மணி. இந்த நாளை இரவு பகல் எனப்பிரிக்க வேண்டும். பகல் 30

நாழிகை, இரவு 30 நாழிகை எனப் பிரித்துக்கொண்டு, பகல் 5 தாகப் பிரிக்கவேண்டும். அப்படிப் பிரிக்கும்போது 6 சம நாழிகைகளாகிறது. 6X5=30 நாழிகை என்பது ஒரு பூதத்தின காலம். அதாவது 2 மணி 24 நிமிடம் (ஒரு நாழிகை என்பது 24 நிமிடம்) சூரியோதயம் தொடங்கி வரிசைப் படுத்தினால் சூரியோதத்திலிருந்து முதல் 6 நாழிகை ஆகாய பூதத்தின் ஆட்சி, இது சனியின் ஆதி பத்தியம். அதாவது சூரிய உதயம் 6 மணி என்றால் 8—24 வரையிலும், அடுத்த இரண்டாவது 6 நாழிகை 10.48 காலை வரையிலும் காற்றின் ஆதிபத்தியம் புதனின் ஆட்சி, இது 4ம் எண்ணுக்கு உரியது, அடுத்து வரும் 6 நாழிகை 1 - 12 மாலை தீயின் ஆதிபத்தியம், இது சூரியன், செவ்வாய், கேது, இவர்களின் ஆட்சி. அடுத்து வரும் மூன்றாவது 6 நாழிகை 3.38 மாலை வரையிலும் அப்பு பூதமான நீரின் பிரிவு, இது சந்திரன், சுக்கிரனின் ஆதிபத்தியம். அடுத்து 5வது பிரிவாகிய 6 நாழிகை. 6. 00 மாலை வரையிலும் பிருதிவி தத்துவம். குருவின் ஆட்சி. பின் இரவு 30 நாழிகையை பூமி தத்துவம் 6 நாழிகை குருவுக்கு, பின் நீர் தத்துவம் 6 நாழிகை, சந்திரன், சுக்ரன், பின் 6 நாழிகை நெருப்பு தத்துவம் சூரியன், செவ்வாய், கேது, பின் வாயு தத்துவம் 6 நாழிகை புதன், பின் 6 நாழிகை ஆகாயத் தத்துவம் 6 நாழிகை சனி மீண்டும் சனியாகி ஆகாயம் 6 நாழிகை இப்படியாக ஒவ்வொரு நாளும் ஐம்பூதக் கூறுபாடுகளாகி அந்தந்த பூதம், தன் தத்துவங்களை மனிதர், மிருகம், தாவரம் அண்டபிண்டங்களில் தனது நல்லதும், கெட்டதுமாகிய கிருத்தியங்களைச் செய்யும்

மேலே கூறிய நாட் பிரிவுகளில் எந்த நேரத்தில் ஒரு குழந்தை பிறக்கிறதோ அந்த நாளில் அந்த நேரத்தில் நடக்கும் பூதத்தின் குணமும், கிரகங்களின் சாயலும் அக்குழந்தைகளுக்கு உண்டாகும். குணங்களும் அவ்விதமே.

அடுத்து தமிழ் வருஷங்கள் 60 இருக்கிறது. இதில் முதல் ஆண்டு பிரபவ, இறுதி ஆண்டு அக்ஷய என்று கொண்டால் துந்துபி ஆண்டு பிரபவ வரிசையில் இருந்து 56ம் ஆண்டு ஆகிறது. 56ஐ ÷ 5 ஆல் வகுக்க 11 போக மீதி 1 வருகிறது. அப்படியானால் துந்துபி ஆண்டு பிருதிவி பூதத்தின் ஆட்சி பெற்றது. இதற்கு குரு கிரகமே ஆதிக்கம். பூமியிலே நியாயம் கிடைக்க போராட்டங்களும், உண்மை சத்தியத்திற்கு உயர்வு, மதிப்புகளும், அநீதி, கீழ்மை, போலி இவைகளை ஒழிப்பதும், அரசாங்க தலைமைகள் அநீதிகளால் இறக்கப்பட்டு நீதி மீண்டும் ஆட்சிபீடம் ஏறுவது போன்ற சம்பவங்களை ஊகித்து அறியவேண்டும். ஆகவே தமிழ்முறை எண் கணிதத்தை இப்படியெல்லாம் பயன்படுத்த வேண்டும்.

பிறந்த எண்ணும் பெயரெண்ணும் ஒரே பூதத்தினதாக ஒத்து வரவில்லை, என்றால் அதை தங்கள் விருப்பப்படி மாற்றி அமைக்கலாம். பிறந்த தேதி, மாதம் வருஷத்தை மாற்றமுடியாது. இந்த தேதிகளுக்கு உரிய பெயரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

உதாரணமாக 1ம் எண், 2ம் எண் இவை மண் நீர், இப்பூதத்தின் கிரகங்கள் குரு, சந்திரன் சுக்கிரன். இந்த மண்ணும் நீரும் ஒற்றுமையுள்ளது பகையானது அல்ல. ஆகவே 1, 2, எண்ணில் பெயர், பிறந்த தேதி வந்தால் அதை ஒரே பூதத்தினராக மாற்றவேண்டிய அவசியம் இல்லை. மூன்றாம் எண் தீ. இதன் கிரகங்கள், சூரியன், செவ்வாய், கேது. தண்ணீருக்கும், நெருப்புக்கும், ஆகாது ஆகவே பெயர் எண், 3ஆக இருந்து பிறந்த எண் இரண்டாக இருந்தால், தங்களை அறியாது ஏதோ விதி தங்களோடு விளையாடுவதாக உணர்வர்.

மண் நீர் இவைகள் நட்பு.

தீ காற்று ஆகாயம் இவைகள் நட்பு

ஆகவே மண் நீர் இரண்டும் ஒரு கட்சி. தீ, காற்று, ஆகாயம் மூன்றும் ஒரு கட்சி. நீரும் காற்றும் சமம். தனியாக நீர் காற்று இவைகளை சமமாக எடுத்துக் கொள்ளலாம். காற்றும் நெருப்பும் கொண்ட நபர்கள், ஸ்தாபனங்கள் நீரோடு சேரக்கூடாது.

ஆகவே இவைகளை கருத்தில் கணித்துக்கொண்டு தங்கள் வாழ்நாளில் கெட்டதை தவிர்க்கவும், தோல்விகளை விலக்கவும், நல்லதை நாடவும், வெற்றியை அடையவும் முடியும். ஆக, இந்த தமிழ்முறை எண் கணிதம் தங்களின் எண்ணம், செயல், வாழ்வு இவைகளை திட்டமிட மிகவும் பயன்விளைக்கும். இனி அடுத்து, 1, 2, ஆகிய எண்களின் பலன்களைப்பற்றி தனித்தனியாக விரிவாக விளக்கி எழுதுகிறேன்.

இதுவரையிலும் நமது ஆராய்ச்சியில் ஐந்து பூதங்களே உலகத்தை ஆளுகிறது என்று தேர்ந்து, அவைகளை ஒன்று இரண்டு என வரிசைப்படுத்தி அந்த வரிசைக்கு ஏற்றவிதமாக 247 தமிழ் எழுத்துக்களை ஐந்து வகையாக வரிசைப்படுத்தி ஐந்து பூதங்களுக்கு பங்கிட்டும், இருபத்தி ஏழு நட்சத்திரங்களையும், பன்னிரெண்டு ராசிகளையும், வாரத்தின் ஏழு கிழமைகளையும், மாதங்களையும் ஐம்பூதங்களுக்கும் பகிர்ந்தாகிவிட்டது. இதன்படி வாழ்க்கையின் உயர்வு தாழ்வுகளையும் யோக பாவங்களையும் கணிப்பதைப்பற்றி ஆராய்வோம்.

முதலில் ஒன்றாம் எண் பற்றிய நமது ஆராய்ச்சிகளையும், கண்டுபிடிப்புக்களையும் பார்ப்போம்.



## 1.ஆம் எண்ணில் பிறந்தவர்கள்

முதல் எண் ஒன்று, இதன் பூதம் பிருதிவி என்கின்ற மண் தத்துவம். இதன் எழுத்து அ. இது ஏறிய மொத்த எழுத்துக்கள் வடமொழி எழுத்துடன் 81 ஆகும். இதன் அதிகிரகம் குரு. இதன் வடிவம் சதுரம். இதன் நிறம் பொன்னிறம்; மஞ்சள் நிறம். இதன் அதிதேவர் பிரம்மா. தேவதை சரஸ்வதி. இவர்கள் படைக்கும் தொழில் அதிகாரம் பெற்றவர்கள். சகலவித படைப்பாற்றலும் இவர்களுக்குண்டு.

இந்த பிருதிவி பூதமே எல்லாவற்றிற்கும் அடிப்படையான மூலாதார சக்தியாகும். எல்லாவற்றையும் உற்பத்தி செய்யும் படைப்பாற்றல் உடையது. இந்த எண்ணில் பிறந்தவர்களுக்கு பிரம்மாவின் ஆற்றலும் சரஸ்வதிதேவியின் சொல்சித்தியும், வாக்கு சாதுர்யமும், தங்கள் வாக்குக்கு மேலான மதிப்பும் ஏற்படும். எதையும் தங்கிக் கொள்வதில் பொறுமைக்கு பூமியை உதாரணம் சொல்லுவார்களே, அந்த பொறுமை இவர்களுக்கு உண்டு.

இந்த பிருதிவி நமது உடம்பிலே பிருதிவியின் தன்னுடைய அம்சம் பாதி எலும்பாகவும், இந்த பிருதிவி அரையோடு தண்ணீர் அரைக்கால் பங்கு கூடியது மாமிசமாகவும், பிருதிவியில் நெருப்பு அரைக்கால் பங்கு கூடினது தோல் ஆகவும், பிருதிவியில் வாயு அரைக்கால் பங்கு கூடினது நரம்பாகவும், பிருதிவியல் ஆகாயம் அரைக்கால் பங்கு கூடியது மூளையாகவும், ரோமமாகவும் உள்ளது.

இதுவே பிருதிவி பூதத்தின் பஞ்சீகரணக் கலப்புக் கொள்கையாகும்.

ஆகவே, இவர்கள் சரீர பலம் உடையவர்காளகவும், உறுதியான எண்ணம் உள்ளவர்களாகவும், சிவந்த நிறம் உள்ளவர்களாகவும், நல்ல நடுத்தர உயரம் உள்ளவர்களாகவும், நீண்ட பாதங்கலள உடையவர்களாகவும், உயர்ந்து பரந்த நெற்றி உள்ளவர்களாகவும், மிருதுவான ரோமம் உடையவர்களாகவும் இனிமையாக பேசுபவர்களாகவும், யாரையும் கவரும் தன்மை உடையவர்களாகவும் யாரிடமும் மரியாதை எதிர்பார்ப்பவர்களாகவும் இருப்பார்கள்.

## மன இயல்பு:

மேலும் இவர்கள் கபடு இல்லாத உள்ளத்தினராகவும், தன்னம்பிக்கை உடையவர்களாகவும், பிறருக்கு உபகாரிகளாகவும், தெய்வ நம்பிக்கை, நல்ல பண்பு, நாகரீக மனப்பான்மை உள்ளவர்களாகவும், சமூகத்தில் கௌரவம்மிக்க பிரஜைகளாகவும் இருப்பார்கள்.

இவர்களுக்கு அதிக தன்னம்பிக்கை, உறுதி, காரிய வெற்றி இவைகள் உள்ளதினசல் இயற்கையிலேயே அகங்காரம், தற்பெருமை, நான், எனது என்ற பிடிவாத குணங்கள் இருக்கும். மண் பூதத்திற்கு ஐந்துவகை குணங்கள் இருப்பதால் இவர்கள் எல்லாவற்றையும் அறிந்தவர்களாகவும், எதிலும் முதன்மையாக பெருமையுடன் முன்னுக்கு வருவார்கள்.

## இவர்களின் இலட்சியம்:

ஆகவே, இந்த ஒன்றாம் எண்ணில் பிறந்தவர்கள், படைக்கும் ஆற்றல், உற்பத்தி செய்வது. உற்பத்திசெய்ததையும், தங்கள் கொள்கைகளையும் பூமியில் பரப்புவது, மக்களுக்கு வேண்டிய ஆதார அடிப்படை தேவைகளுக்கு

உதவியானவைகளை உண்டாக்குவது, இதில் பிடிவாத மாக இருப்பது, பொன், பொருள், பூமி, மனை சேர்ப் பதில் வெற்றி அடைவது. மானுடப்பிறவியில் உயர் வானதை சாதிக்க வேண்டும் என்று சளைக்காது போராடி வெற்றி காண்பது இவர்களின் பிடிவாதமான லட்சியம்.

கிரக வரிசையில் பிருதிவிக்கு குரு அதிபதியாவதால் பூமியை ஆள்வது. மந்திரித்துவம், பூமியில் பெருமையும் புகழும் நிலைநாட்டுதல், பிறர் தன்னை வணங்கும் படியான வாழ்வு பெறுதல், அரசியல் ஆலோசனைகள், தலைமை ஏற்றல், போதிப்பது, குருத்துவமாக இருப்பது, கொள்கைகளையும் தத்துவங்களையும் பூமியில் எப்பாடு பட்டேனும் பரப்புதல் ஆகியவைகள் குருவினது அம்ச மாகும்.

## இவர்களின் தொழில்கள்:

இவர்கள் பூமியின் அடியில் கிடைக்கும் மூலப்பொருள் களை ஆதாரமாக வைத்துத் தொழில் செய்யலாம். சிமெண்ட் தொழில், இதுபோன்ற ஏஜென்சிகள், குழாய்த் தொழில், கிழங்கு தானிய வகைகளைக்கொண்டு மாவுமில், அரிசி, பால் உற்பத்தி ஆலை, சுரங்கத்தொழில், தான்ய மண்டி, பூமிக்கு வேண்டிய உபகரணங்கள், ஜீவர்களுக்கு வேண்டிய உணவு உற்பத்தித் தொழில், ஆடு, மாடு கோழி, போன்றவைகளுக்கான உணவு தயாரிப்புத் தொழில், பொன், வெள்ளி, உலோகத்தொழில் போன்ற வைகளும் இவர்கள் செய்வார்கள். இவர்களில் பெரும் பாலோர் அரசியல் வாதிகளாகவும், உயர்தர அதிகாரி களாகவும் இருப்பார்கள்.

இவர்கள் கணீரென்ற குரலில் இனிக்க இனிக்கப் பேசும் ஆற்றலும் சுற்று சார்புகளையும் உணர்ந்து கொள்ளும் ஆற்றல்களை உடையதால் வியாபார

விஷயத்தில் இவர்கள் மன்னர்களாகி பொருள்களை சம்பாதித்து குவித்து விடுவார்கள். இவர்களில் எத்தனையோபேர் ஆலை அரசர்களாகவும், மிகப்பெரும் தொழில் உற்பத்தியாளர்களாகவும், நாட்டின் ஜீவநாடியான அடிப்படைத் தொழில்களை ஏற்று நடத்துபவர்களாகவும் இருப்பார்கள். இவர்களுக்கு அரசாங்கம் கௌரவத்துவமும், முக்கியத்துவமும் கொடுக்கும்.

இவர்களுடைய வாழ்க்கையில் ஒவ்வொரு ஐந்தாண்டு முடிந்து ஆறாம் ஆண்டு துவக்கங்கள் விஷேசமானதாகவே இருக்கும். உதாரணமாக 6ம் ஆண்டு, 11-ம் ஆண்டு, 16-ம் ஆண்டு, 21-ம் ஆண்டு, 26 ம் ஆண்டு, 31 ம் ஆண்டு, இப்படியாக ஒவ்வொரு ஐந்து ஆண்டுகளுக்குப் பின் ஆரம்பம் ஆகும் ஒவ்வொரு ஆண்டுகளும் மகத்துவமும், முக்கியத்துவமும் உள்ளதாகவே இருக்கும்.

## இவர்களின் வியாதிகள் :

இவர்களுக்கு ரத்தசம்பந்தமான வியாதிகள், மூலம், பௌத்திரம், ஈரல் கோளாறுகள், காமாலை வியாதிகள் நரம்புத்தளர்ச்சி, வழுக்கை, முடிகொட்டல் போன்ற வியாதிகள் இருக்கும் இவர்கள் தங்கபஸ்பம், அயச் செந்தூரம், காந்த செந்தூரம் போன்றவைகளைச் சாப்பிட்டு வரலாம்.

பிருதிவி பூதத்தின் ஆளுமையும், குருவின் கடாட்சமும் கிட்ட பிருதிவி பூதத்தின் சின்னமாகிய சதுரத்தில் தங்கத்தகடு செய்து பிருதிவியின் பீஜத்தை அதில் எழுதி வழிபட்டு வரலாம். குருவின் ஸ்துதி, குருவின் காயத்ரி சொல்லி வரலாம். சதுரமான அளவில் தங்கத்தில் மஞ்சள் புஷ்பராகக்கல்லைப் பதித்து ஆள்காட்டிவிரலில் அணிந்துவர நல்லது.

மேலும் இவர்களின் அதிதெய்வம் — பிரம்மா சரஸ்வதியை வழிபட்டு வருவதால் சகல விதமான நன்மைகள், சொல்சித்தி, கௌரவம், நாணயம் நம்பிக்கையுள்ளவர்களாக சமூகத்தில் உயர்ந்து நிற்பார்கள். கலைகளில் வல்லவர்களாவார்கள்.

இவர்கள் திடமான ஆயுள் உள்ளவர்கள்.

இவர்களின் பகை எண்கள் *3 4* ஆகும்.

உறவு எண்கள் *2 5* ஆகும்.

இனி பெயர்கள், ஸ்தாபனங்கள் ஆகியவைகளுக்கான மதிப்பீடுகளும், அதிர்ஷ்டங்களையும் உதாரணத்துடன் விளக்குவோம்.

| | | |
|---|---|---|
| தமிழன் | } | 5)6(1 |
| *1 2 1 2* | } | 5 |
| | | ——— |
| | மீதி | *1* மண்: |
| | | ——— |

தமிழன் என்ற சொல் பொறுமை, பெருமை, புகழ், அழிவற்றதன்மை இவைகளை உணர்த்துகிறது. தமிழ் குடியே உலகில் மூத்தகுடி. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே - வானொடு முன்தோன்றிய குடியல்லவா தமிழன். உலகிலேயே இலக்கண இலக்கியம் பெற்று அழிவற்ற வரலாற்றை உடைய தமிழ் குடிதானே குமரிக்கண்டத்தில் வாழ்ந்தது. கடல் அழிந்து விட்டாலும், தமிழ் இலக்கியங்கள் பல அழிக்கப்பட்டாலும் அழிவற்ற இரண்டொரு இலக்கியமே தமிழர் வாழ்ந்த விதத்தைக் காட்டுகிறதல்லவா?

பிரிட்டிஷார் } 5)11(2
2 2 2 2 1 2 } 10

மீதி 1 மண்

பிரிட்டிஷார் உலகத்தின் மூலைமுடுக்குகளை எல்லாம் வியாபித்து ஆண்டார்களே, அவர்களுக்கு அமைந்த எண் 1. எப்படியிருந்தார்கள் என்பதை உலக வரலாறு சொல்லும்- மண்ணாசையும், பொண்ணாசையும் அவர்களை அப்படி அலையவைத்தது.

பிரம்மா } 5)6(1
2 1 2 1 } 5

1 மண் தத்துவம், கிரகம் குரு

இந்த பிரம்மா என்பவர் பூமியில் படைப்புத் தொழில் செய்பவர். அன்னமய கோசத்தை உண்டாக்குபவர், இவரே படைப்பாற்றலில் சகல அதிகாரமும் பெற்றவர்.

சில புகழ் பெற்ற பெரிய சரித்திர புருஷர்கள் 1ம் எண்ணில் பிறந்துள்ளனர். உதாரணம்:

நெப்போலியன் } — 16 5)16(3
4 2 5 2 1 2 } 15

1 மண் தத்துவம்
கிரகம் குரு.

நெப்போலியனைப் பற்றித் தெரியாதவர்கள் இந்த பூமியில் இருக்கமுடியாது. அரசியல், வரலாறு படித்தவர்களுக்கு நெப்போலியன் என்ற பெயர் தெரியும். நெப்போலியன் மண் தத்துவத்தில் பிறந்தவராதலால் இந்த

மண்ணை ஆளவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. இந்த ஆசையை, தனது கொள்கையை படைவீரர்களுக்கு உணர்த்திக்காட்டி தன் வெற்றியிலும், உலகத்தை வியாபித்து ஆள்வதிலுமே விருப்பமும், நான் என்ற அகந்தையும் கொண்டிருந்தான்.

காரல் மார்க்ஸ்
1 1 2 1 2 2 2 } 11 — 5) 11(2
10
——
1 மண் தத்துவம் குரு.
——

காரல் மார்க்ஸ் மண்தத்துவமாகிய 1ம் எண்ணில்பிறந்ததினால் அவர் உலக முழுவதும் பாட்டாளி வர்க்கத்தினரின் உழைப்பும் அவர்கள் சுரண்டப்படுவதையும் சுட்டிக்காட்டி, "டாஸ் கேபிடல்" என்ற ஒரு புது பொருளாதார தத்துவத்தை இந்த மண்ணிலே வியாபிக்கவைத்தார். இவர் இதனால் குருவின் கௌரவமும் பெருமையும், தேசமக்களின் கீர்த்தி, ஆதரவுகளைப் பெற்றார்.

தி. மு. க
2 3 1 } —6 5) 6(1
5
——
1 மண் தத்துவம் குரு.
——

இந்த ஸ்தாபனம் 3 எழுத்து ஆனதால் ஒரு மாநிலத்தை அதன் மக்களை தனது கொள்கைப்படி இணங்கவைத்து ஆட்சி பீடத்தை பிடித்தது. தமிழக சரித்திரத்தில் மகத்துவம் மிக்க ஸ்தாபனமாக நிலைத்துவிட்டது. அரசியலில் புதிய விழிப்புணர்ச்சியை தமிழகத்தில் தோற்றுவித்தது.

எம். ஜி. ஆர்
4 2 2 1 2 } — 11 5) 11 (2
10

——

1 மண் தத்துவம் குரு.

——

எம். ஜி. ஆர் என்ற மூன்று எழுத்துக்கள் பூமியில் பிரபலமாகி மக்களிடையே வியாபிக்க காரணம் இந்த 1ம் எண்ணே. இதன் கிரகம் குரு. அதனால் இவர் பெயர் புகழ், ஆட்சி பீடத்தில் அமர்ந்து மந்திரித்துவம் இவைகளை வகிக்கிறார். லட்சியங்களில் உயர்வு, பலரை உருவாக்கி விடுதல், பலருக்கு வாய்ப்பளித்தல், இந்த மூன்று எழுத்திலே அவ்வளவு பலம்.

கே. பாக்யராஜ்
4 1 2 11 2 } —11 5) 11 (2
10

——

1 மண் தத்துவம் குரு.

——

தற்காலம் பிரபல புகழ் வாய்ந்த கதை, வசனம் நடிப்பு, இயக்குனர் இவைகளில் தனித்திறத்துடன் தமிழகத்தில புகழ் வாய்ந்து வியாபித்து இன்று பெருந் தொகை வாங்கிக் கொண்டிருக்கிறார்.

இவருடைய பிறந்த தேதி 7. 1. 1951 சனிக்கிழமை. சனிக்கிழமை — என்பது — 5ம் எண்ணுக்கு உரியது. 5ம் எண்ணின் ஆதிபத்திய கிரகம் சனி.

பிறந்ததேதி 7 இதை 5) 7(1
5

——

2

——

வகுக்க வந்த மீதி 2.

ஆக பிறந்த சிறப்பு எண் 2. இதன் கிரகம் சுக்ரன், சந்திரன். இவர்கள், கலை, கற்பனை, எண்ணம் ஆற்றல் இவைகளுக்குச் சம்பந்தப் பட்டவர்கள் ஆனதினால்தான் இவருக்கு கலையில் அளவற்ற ஈடுபாடு இளம் வயதிலேயே இருந்தது. கலைக்காக இவர் குடும்பத்தையே பகைத்தார். சகோதரர்களிடம் அடி உதைப்பட்டார்.

அடுத்த சிறப்பு இவரது பிறந்த தேதி மாதம், வருஷம் இவைகளைத் தனித்தனியே பார்த்தால் 2,1,1, என்றபடி வரும். ஜனவரி முதல் மாதம், 7ம் தேதி என்பது 5க்குப் பங்கிட வந்த மீதி 2, ஆக 1,2 நட்பு எண்கள் 1951 ஐந்தால் வகுத்து வரும் மீதி 1. ஆக 2, 1, 1, இப்படியே வருகிறது. இவரது சிறப்பு தகுதியும் அதிர்ஷ்டமும் இவரது 7. 01, 1951ஐ கூட்டி 5ஆல் வகுக்க வரும் எண் 4. இந்த நான்காம் எண் 1ம் எண்ணுக்குப் பகை என்று கூறினோம், இவைகளை தனித்தனியே பார்க்கும் போது 7. 1. 1951 —2, 1, 1 ஆக இவருக்கு பெயரெண்ணுக்கும் பலம் கொடுக்கிறது, சுக்கிரன், சந்திரன், சனி இவர்கள் இவருக்கு நட்பாகிறார்கள். இவரது ஆளுகை கிரகம் குரு, பெயர் எண் 1 பிறந்த எண் 2, கிழமை சனி இது 5ம் எண்.

இவர் ஸ்டார் ஆனது இவரது 29ம் வயதிலே. இந்த 29ம் வயது என்பது ஐந்து பஞ்சபூத பரிவிருத்தி முடிந்து 6வது பரிவிருத்தியான மண்பூத தத்துவம், குருவின் இரண்டாவது கட்ட ஆட்சி. இதில் இவர் மிகச்சிறப்புடன் ஸ்டார் ஆகிவிட்டார். 35 வயது வரை இவர் திரை உலகில் புகழ்பெற்று நிற்பார் என்றாலும் அடுத்து வரும் இவரது வயதில் இந்த ஸ்டார் இவருக்கு தனது 33வது வயது முழுவதும் அதாவது 7. 01. 1983 முதல்

7. 01. 1984க்குள் இவரின் புகழ் மங்க ஆரம்பித்துவிடும் என்பதை உறுதிப்படுத்தலாம். இதை வாசகர்கள் கவனத்தில் வைத்துப் பார்க்கவும். இவரது பெயர் எண். பிறந்த எண் ஒற்றுமையுள்ளது. மேலும் இவர் நட்சத்திரம் பூராடம், லக்னம் மிதுனம், இவை 4ம் எண் பூதத்திற்கு வருகிறது. இதற்குடைய கிரகம் புதன், காற்று. அதனால் தான் இவரது வயது 29ல் புகழுக்கு வந்தார்.

5)29(5
25
———
4 வாயு பூதம், புதன்—
———

இவரே திடீர் பிரவேசம், மக்கள் மனதில் இவரைப் பற்றி அலையும் நினைவுகளைக் கொடுத்தார். ஆகவே வாசகர்கள் இக்கருத்துக்களை கவனித்து தமிழ் எண்கணிதத்தை புரிந்து கொள்ளவேண்டும். (இவரது 33ம் வயதில் மூத்தமனைவி இறந்தார். சம்பாத்தியங்கள் முதல் மனைவி வர்க்கத்தார்களால் அழிவு பட்டது)

இனி ஒன்று என்ற எண்ணில் ஏற்பட்ட தொழில் களைப் பார்ப்போம். அமுல் என்ற பெயர் உலகெங்கிலும் பரவி நிற்கிறதே ஏன்? அதன் எண் ஒன்று அதனால்தான்

அ மு ல்
1 3 2 } — 6 5)6(1
5
———
1 மண் தத்துவம் குரு
———

இந்த அமுல் தொழில் மண்ணின் பூத தத்துவத் திற்கு சரியாக இருக்கிறது. இது உடம்பில், எலும்பு,

சதை, நரம்பு, தோல், முடி இவைகளின் வளர்ச்சியை கொடுக்கும் மண் தத்துவமாக விளங்குவதால் உலகத்தில் பெரும் புகழும், வியாபாரத்தில் முதன்மையும் பெற்று நிற்கிறது.

இனி புகழ்பெற்ற நகரங்களைப் பார்ப்போம்:

| | | |
|---|---|---|
| டில்லி<br>2 2 2 | = 6 | 5)6(1<br>5<br>———<br>1 மண் தத்துவம் குரு<br>——— |

டில்லி என்ற பெயரில் அமைந்துள்ள நகரம் உலகத்திற்கே தெரிகிறது, இது மண் தத்துவம், குருத்துவம் முதலியன இந்த எண்ணில் இருப்பதால் இந்தியாவின் முதன்மையான தலைநகரமாக திகழ்கிறது.

| | | |
|---|---|---|
| பம்பாய்<br>12 1 2 | — 6 | 5)6(1<br>5<br>———<br>1 மண் தத்துவம் குரு<br>——— |

பம்பாயும் முதலாம் எண்ணில் வருவதினால் இந்தியாவின் மான்செஸ்டராக அமைந்துள்ளது. இந்தியாவின் உற்பத்தி நகரமாக விளங்குகிறது, பூமியில் விளைந்த பருத்தி போன்ற பொருள்களை மூலப் பொருளாகக் கொண்டு உற்பத்தியாகிறது.

| | | |
|---|---|---|
| கோயமுத்தூர்<br>5 1 3 2 3 2 | —16 | 5) 16 (3<br>15<br>———<br>1 மண் தத்துவம் குரு<br>——— |

கோயமுத்தூர் என்ற பெயருள்ள நகரமும் மண் தத்துவத்தில் அமைந்துள்ளதால் இது தென்னிந்தியாவின் மான்செஸ்டராகவும், பல யந்திரத் தொழிலும், பூமிக்கு வேண்டிய மின் விசை மோட்டார் பம்பு உற்பத்தியில் முதன்மை பெறுகிறது.

ஆகவே, இந்த நகரங்கள் பிருதிவி பூதமாகிய 1-ம் எண்ணும், அதன் கிரகம் குரு மகத்துவமும், கௌரவமும், பெருமையும் கொண்டு உள்ளது. அரசாங்க முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் விளங்குகிறது.

ஆக, வாசகர்கள் தமிழ்முறை எண்கணிதத்தை எப்படியெல்லாம் பயன்படுத்தலாம் என்று இம்முறையைக் கொண்டு சோதனை செய்து பார்க்க வேண்டுகிறேன். அதற்காக நடிகர் பாக்கியராஜின் முன்னேற்றம் குறித்து அவர் பெயர் எண், பிறந்த எண், கிழமை, நடைபெறும் ஆண்டு இவைகளையெல்லாம் மாதிரிக்குக் காட்டினேன்.

இந்த ஒன்றாம் எண்ணுள்ளவர்கள் மூன்றாம் எண் உள்ளவர்களுடன் அதிக தொடர்பு, வியாபாரக் கூட்டு இவைகளை வைத்துக் கொள்ளக் கூடாது.

இவர்கள் லாட்டரி போன்றவற்றிற்கு 1, 2, 5, ஆகிய எண்களை தேர்வு செய்து வாங்கலாம். இந்த தேதிகளில் குலுக்கல் நடக்க வேண்டும். இவர்களுக்கு வியாழன் சிறப்பு நாள். திங்கள், வெள்ளி அடுத்தபடியாக நல்ல நாட்கள். சனிக்கிழமை உயர்வுகளையும், பெரிய மனிதர் சந்திப்பு, ஆலய தரிசனம் இவைகளைப் பெருமைபடுத்தித் தரும்.

இப்படியெல்லாம் தமிழ்முறை எண் கணிதத்தில் ஆராய்ந்து செயல்பட நிச்சயம் வெற்றி அடையலாம் என்பதில் சந்தேகம் வேண்டாம்.

☐ உலகப்புகழ் பெற்ற கைரேகை மேதை சீரோ நவம்பர் 1ம் தேதி பிறந்தார்.

☐ மாவீரன் மகா அலெக்சாந்தர் ஜூலை 1ம் தேதி பிறந்தார்.

☐ அன்னி பெசண்ட் அம்மையார் அக்டோபர் 1ம் தேதி பிறந்தார்.




## இரண்டாம் எண்

இதுவரை தமிழ் முறை எண் கணிதத்தில் ஒன்றாம் எண் பற்றிப் பார்த்தோம். இனி இரண்டாம் எண் பற்றிப் பார்ப்போம். இரண்டாம் எண்ணின் வரிசையில் நிற்கும் பூதம் அப்பு. அதாவது நீர். இதன் எழுத்து இ—யும் இது ஏறிய கி, கீ முதலியனவும். இந்த வரிசையில் வடமொழி எழுத்துக்களான ஸ்ரீ ஹி போன்றவையும் அடங்கும். இதன் மதிப்பீட்டு எண் 2. இதன் கிரகம் சந்திரன், சுக்கிரன். இது பெண்பால், நீரணுக்கள், பிறை வடிவம். முக்கால் பங்கு வளைந்த பிறை போன்ற வடிவம். உலகில் முக்கால் பங்கு நீராகவே உள்ளது. உடலும் இப்படியே. இப்பூதம் உடம்பில் அப்பு பூதத்தின் தன்னம்சத்தில் பாதி மூத்திரம், பிருதிவி அரைக்கால் பங்கு கூடினது வாய் நீர், தேயு அரைக்கால் பங்கு கூடினது வியர்வை. வாயு அரைக்கால் பங்கு கூடினது இரத்தம். ஆகாயம் அரைக்கால் பங்கு கூடினது சுக்கிலம். இதுவே அப்பு தத்துவ உடல்.

இந்த பூதத்தின் அதி தேவர் விஷ்ணு. தேவதை லட்சுமி. இதன் சுவை இனிப்பும், துவர்ப்பும். இதன் நிறம்

வெண்மை, ஸ்படிகம். உடம்பில் முழங்காலிலிருந்து தொப்புள்வரை இதன் ஆட்சி.

இந்த இரண்டாம் எண்ணில் பிறந்தவர்கள் அழகாக இருப்பார்கள். வட்ட முகம். வெளிரிய குளிர்ச்சியான தேகம். செவ்வரி படர்ந்த கண்கள். கருமையும், செம்மையும் கலந்த முடி. பார்வைக்கு இனியவர்கள். அழகாகப் பேசுபவர்களில் கணீரென்ற சாரீரம் உடைய வர்கள். ஆனால் குளிர்ச்சியான பேச்சு உடையவர்கள். இவர் களுடைய பார்வையில் கனிவு, பேச்சில் இனிமை; யாரையும் கவரக்கூடிய எளிய அழகிய சுபாவம். இவர்கள் எப்பொழுதும் அமைதியை விரும்புவார்கள். அழகை ரசிப்பார்கள். ஏன், அழகாக வாழ்பவர்கள், ஒவ்வொன்றிலும் அழகு, பரிசுத்தம் இவைகளை விரும்புபவர்கள்.

இவர்கள் காலத்துக்கு தகுந்தபடி எண்ணங்கள், கொள்கைகள் இவைகளை மாற்றிக்கொள்பவர்கள். பழமையை மாற்றி புதுமையை புகுத்திக் கொள்பவர்கள். துயரங்களை தாங்கிக்கொள்ள மாட்டார்கள். மனம் கவர்ச்சியான பொருள்களைத் தேடி அலையும்.

நீர் மண்ணோடு சார்புடையது. மண்ணும் நீரும் ஒற்றுமை உடையது. மண்ணை தனியாக அள்ளுவதை விட நீர் ஊற்றி பிசைந்து எடுக்க சுலபமாகும். ஆகவே இந்த ஒன்றாம், இரண்டாம் எண்ணுள்ளவர்கள் கூடித் திட்டமிட்டால் காரியம் வேகமாக நடைபெறும். ஒன்றாம் எண்ணுடையவர்கள் சோம்பலாக இருந்தால் இரண்டாம் எண்ணுடையவர்களின் கூட்டு மிகவும் சுறுசுறுப்பை உண்டாக்கும்.

நீர் ஒரு தன்மையாக நிற்காது. அது ஓடும் தன்மை யுடையது. ஆகவே இந்த இரண்டாம் எண்ணை ஆதிக்க மாக உடையவர்கள், ஓரிடத்தில் நிலையாக இருக்க மாட்டார்கள். இவர்கள் நீர் போல நெல்லுக்கும் புல்லுக்

கும் பாய்ந்து வளம் கொடுப்பார்கள். பிறருடைய தாகத்தை தணிப்பவர்கள். ஆனால் தனது தாகத்தை தணிக்கமாட்டாமல் வேட்கையுடன் இருப்பார்கள். இவர்கள் பிறருக்கு உணர்ச்சியூட்டக்கூடியவர்கள். நாடி நரம்பு களில் ரத்த ஓட்டம் எப்படியோ, அப்படி மன ஓட்டம் உடையவர்கள். பிறருக்கு உரத்தை கொடுக்கக் கூடியவர்கள். இவர்களின் போக்கே இவர்களுக்கு முடிவானது. சித்தம் என்பது நீரின் அம்சம் பெற்றதினால் பொருள்களின் நினைப்பே சித்தமாகும். இது ஐம்பொறி களுக்கும் சலனத்தைக் கொடுத்து அவைகளைத் தவிப்பு உண்டாக்கும் தன்மையது.

சந்திரன் — மனோகாரகன் — சுக்கிரன் மனம் விரும்பி யவைகளை பெறத் துடிப்பவன் — கலைகள் என்பதெல்லாம் மனத்தின் சிருஷ்டியும் மனத்தை திருப்திபடுத்துவஃதும். இவர் களை — மாதா, மற்றும் மனைவி இவர்களுக்கு காரகர் களாக கூறப்பெறுகிறது.

## இரண்டாம் எண்ணில் பிறந்தவர்கள்:

இந்த எண்ணில பிறந்தவர்கள் ஆலோசகர்களாகவும், சிந்தனையாளர்களாகவும், குளிர்ச்சியான பண்டங்களில் பிரியம் உள்ளவர்களாகவும் இருப்பார்கள். இவர்கள் வயல், தோப்புக்களுக்கு அதிபதியாகவும், பஸ் ரூட்கள், தியேட்டர், உணவு விடுதி, குளிர் சாதன உற்பத்தி, சர்க்கரை ஆலை, மாவு மில், ஐஸ் வியாபாரம், மீன், முட்டை உற்பத்தி, நீரில் கரையும் பொருள்களை உற்பத்தி செய்பவர் களாகவும், உர உற்பத்தி, எண்ணெய் உற்பத்தி இவை களுக்கு காரணகர்த்தாக்களாக இருப்பார்கள். இவர் கள் திரவ ரூபமான பொருள்களில் நல்ல லாபங்களை அடைவார்கள். வீட்டு அலங்காரப் பொருள்களான வண்ணக்கலவைகளையும் உற்பத்தி செய்யலாம். துறை

முகத்தில் வேலை செய்பவர்கள் இந்த இரண்டாம் எண் ஆதிக்கம் உடையவர்களாக இருப்பார்கள். கப்பல் மாலுமிகள், மீனவக் காண்ட்ராக்டர்கள், மீன் வியாபாரிகள், நர்சுகள், பாத்திர உற்பத்தியாளர்கள், வியாபாரிகளும் இந்த வகையிலே சேர்வார்கள்.

## இவர்களின் மன இயல்புகள் :

அரசியல் கலைத்துறையில் உள்ளவர்கள் மக்களை திசை திருப்பிவிட முடியும். தங்களின் எண்ணங்களை மக்களின் நாடி நரம்புகளில் பாய்ச்சிவிட முடியும். பொருளாதாரத் துறையில் உள்ளவர்கள் அடிக்கடி கொள்கை களை மாற்றிக் கொள்வார்கள். கலைத்துறையில் மக்களை சிரிக்க வைக்கும் நகைச்சுவை நடிகர்களிலே நாகேஷ், என். எஸ். கிருஷ்ணன் போன்றவர்கள் இந்த இரண்டாம் எண்ணில் பெயர் அமைந்த காரணமே இவர்கள் புகழ் பெற முடிந்தது. மன சந்தோஷமே இரண்டாம் எண்.

இவர்கள் மன மகிழ்ச்சி தரும் காரியங்களில் ஈடுபடு வார்கள். காதல் இவர்கள் வாழ்க்கையில் முக்கியத்துவம் பெறும். கலையே வாழ்க்கையின் அம்சம். கலை கலவாத வாழ்க்கை இவர்களுக்கு வேதனையைத் தரும். இவர் களுக்கு காம நினைப்புக்கள், மகிழ்ச்சி தரும் கேளிக்கைகள் இவைகளுக்காக பணத்தை வாரி இறைப்பது போன்ற குணங்கள் இருக்கும்.

பெண் மக்களாலும், மனைவி வர்க்கத்தாலும் நல்ல பலனைப் பெறுவதும், பயன்படுத்திக்கொள்வதும் இவர் களுக்கு இயற்கையான அம்சமாகும்.

## இவர்களின் வியாதிகள்

இவர்களுக்கு சளி, நீரேற்றம், அடினாய்டு, டான்சில் போன்ற வியாதிகளும், குளிர் சுரம், வயிற்று உபாதைகள்,

கபவாதம் போன்ற வியாதிகளும், நீரிழிவு, நீர் சுருக்கு, கல்லடைப்பு, சதையடைப்பு போன்ற சிறு நீர் வியாதிகளும், சர்க்கரை வியாதிகளும் இவர்களைப் பீடிக்கும், செக்ஸ் வியாதிகளுக்கும் இவர்கள் ஆளாகவும் கூடும்.

இவர்கள், அயச்செத்தூரம், அயகாந்தச் செந்தூரம், வங்க பஸ்பம், இவைகளைச் சாப்பிட்டு வர உடம்புக்கு நன்மைகள் ஏற்படும். இந்த இரண்டாம் எண்காரர்களின் விரோத எண் மூன்று, நான்கு, ஐந்து ஆகிய மூன்று எண் களுமே. கந்தசாமி என்ற 2-ம் எண் நபர், வேலுசாமி, ராமசாமி என்ற ஐந்தாம் எண் நபருடன் சேர்வது அவ்வளவு விசேஷம் ஆனது அல்ல. இதே கந்தசாமி, கோபால் என்ற மூன்றாம் எண்காரருடன் சேருவது பகைமையை உண்டாக் கும் என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

இவர்களின் சின்னம் பிறை. இவர்கள் பிறை போன்று தங்கத்தில் மோதிரமாகச் செய்து அதன் நடுவில் முத்து, வைரம், சந்திரகாந்தக்கல், வெள்ளை புஷ்பராகம் இவை களைப் பதித்து இடது கையில் அணிந்துகொள்ள நல்லது.

இவர்கள் விஷ்ணு, லட்சுமி ஆகிய தெயவங்களை வீட்டிலோ, கோயிலிலோ வணங்கி வர அவர்களின் கடாட்சம் கிட்டும்.

சித்திரை, வைகாசி, ஆவணி, புரட்டாசி இந்த மாதங் களும் இவைகளுக்குச் சரியான ஆங்கில மாதமும் சந்திரன், சுக்ரன் பருவகாலம் ஆதலினால், இவர்களுக்கு விசேஷ மானது. தங்கள் வயதில் முப்பதிலிருந்து முப்பத்தி ஐந்து ஆண்டு வரை இவர்களுக்கு ஒரு பொற்காலம்;

இவர்களுக்கு அடிக்கடி பிரயாணம், கடல் பிரயாணம், கடலைத தாண்டிய பிரதேசங்களுக்குச் செல்லல், கடற்கரை நகரங்களுக்கு பிரயாணம், வியாபாரம் இவைகள் விசேஷ மாக இருக்கும்.

இனி இந்த இரண்டாம் எண்ணில் பிறந்தவர்களைப் பற்றியும் ஸ்தாபனங்கள், இடங்கள் குறித்தும் பார்ப்போம்.

பி ரி ட் டிஷ் | இந்த பெயரில் இரண்டு எண்கள்
2 2 2 2 | அதிகமாக விழுந்துஉள்ளதால் இதில் நீர் கிரகங்களே அதிக ஆளுமை செய்வதால், நீர் ஓரிடத்தில் நிலையாது. பரவும் குணம் அதிகம். ஆகவே கடல் தாண்டி ஆசை என்னும் தாகத்தால் நாடு பிடித்து—பிறரது செந்நீரை குடித்தனர். நீர்மை என்பது ஆசை, பேராசை. தாகத்தை உண்டாக்குவது. நாடு பிடிக்கும் ஆசையே பிரிட்டிஷ் என்ற வார்த்தைக்கு அர்த்தம்.

விஷ்ணு | = 5 ) 7 ( 1
2 2 3 | 5

———

2 மீதி இரண்டாம் எண் அப்பு

——— பூதம் சந்திரன், சுக்கிரன் ஆதிக்கம்.

விஷ்ணு ஜலதேவன். பாற்கடலில் பள்ளிகொண்டவன், கால்நடைகளான கோகுலத்துக்குத் தலைவன். பால், வெண்ணை, நெய் இவனுக்குப் பிடித்தமானது. ஜனங்களுக்கு செல்வத்திலே ஆசை காட்டி மனதிலே ஓயாது அதை நாடும் நாட்டத்தைக் கூட்டுவிப்பவன். ஜனங்களை செல்வத்திற்கு அதிபதியாக்கி கேளிக்கைகளில் ஆழ்த்துபவன். கிருஷ்ணன் லீலைகளில் மன்னன்.

மு. க ரு ணா நி தி | 5 ) 12 ( 2
3 1 3 1 2 2 | 10

———

2 அப்பு தத்துவம்

——— சுக்கிரன் சந்திரன் ஆதிக்கம்.

இவர் இந்தப் பெயரை உடையதினால் மன ஓட்டம் அதிகம் உள்ள சிந்தனையாளர். மக்களுக்கு எழுச்சியும் உணர்ச்சியும் ஊட்டக்கூடியவர். கலை மீது அளவுகடந்த பற்று வைத்தவர். காதல் கதைகளை நிறைய ஆரம்ப காலத்தில் எழுதியுள்ளார். எதிலும் நான் முந்தி என்ற எண்ணம் உள்ள சிந்தனை உடையவர். இவருக்கு நரம்புத் தளர்ச்சி, இரத்தம், பித்தம் சம்பந்தமான வியாதிகளே பீடிக்கும்.

இ ந் தி ர ா கா ந் தி
2 2 2 1 1 2 2 } — 5 ) 12 ( 2
10
———
2 அப்பு தத்துவம்
——— சந்திரன், சுக்கிரன் ஆதிக்கம்.

இவர் இரண்டாம் எண்ணின் ஆதிக்கம் பெற்றதினால் மனம் இளகும் சுபாவம், சுறுசுறுப்பு, உணர்ச்சிப்பூர்வமான செயல்களை செய்யக்கூடியவர். சதா பிரயாண யோகம். சரித்திரத்துவம் மிக்க காரியங்களை செய்து பிரசித்தி பெற்றார். பங்களா தேச யுத்தம், மன்னர் மான்ய ஒழிப்பு, நாட்டு மக்கள் மீது தாயன்பு இவைகளால் தன்னை மறந்த நிலையில் உழைக்கும் நெஞ்சம் உடையவர். அன்பு, காதல், குடும்பம் இவைகளில் ஏமாற்றம் அடைவதற்கு இந்த இரண்டாம் எண்ணே காரணம். இவரது வயது அளவுகளில் இவ்வெண்ணுக்கு விரோத எண்கள் இவருக்கு தோல்வி, மனக் கஷ்டம் இவைகளை கொடுத்திருக்கும்.

தொழில் துறையில் சர்க்கரை என்ற சொல்லை எடுத்துக்கொள்ளுங்கள். சர்க்கரை என்றால் நாவில் நீர் ஊறுகிறது. சர்க்கரை தண்ணீரில் கரையக்கூடியது. கரும்பு விளைவுக்கு அதிக தண்ணீர் தேவை. இந்த

சர்க்கரை என்ற சொல் அப்புவான நீர் பூதத்தினால் சர்க்கரை உலகப் பிரசித்தி பெற்றது.

சர்க்கரை } 5 ) 7 ( 1
1 2 2 1 1 } 5

2 அப்புபூதம் நீர் இனிப்பு சம்பந்தமான கிரகங்களே சந்திரன் சுக்கிரன்.

ஆப்பக்கூடல் } 5) 12 (2
1 2 1 2 3 1 2 } 10

2 அப்பு

ஆப்பக்கூடல் என்ற சொல்லை எடுத்துக் கொள்ளுங்கள், சமீப காலமாக சர்க்கரை ஆலைக்குப் பெயர்பெற்று விளங்குகிறது. சக்தி ஷுகர்ஸ எங்கும் பரவலாக உச்சரிக்கப்படுகிறது. இங்கு சர்க்கரைத் தொழில் அபிவிருத்தியும் பல ஆயிரக்கணக்கான ஏக்கர் கரும்பு விளைச்சலும் பெருகி நிற்கிறது.

சென்னை } 5) 7 (1
4 2 1 } 5

2 நீர், சுக்கிரன், சந்திரன்

சென்னை ஒரு கடற்கரை நகரம். கலையும், உணர்ச்சித் துடிப்பும் கொண்ட மக்களை உள்ளடக்கி பரபரப்பாக நீரோட்டம் போல் இயங்கி வருகிறது. இதில் உள்ள பெரும்பாலானவர்கள் கலை வேட்கை, கல்வி வேட்கை, பதவி வேட்கை என்ற தாகத்திலே தவிப்பதற்கு சென்னையின்

இரண்டாம் எண்ணே காரணம். சந்திரன், சுக்கிரன் ஆதிக்க எண் ஆனதினால் கவர்ச்சி. ஆடம்பரம் இவைகளை இந்த நகரம் பெற்றுள்ளது.

| அ | ஹ | ம | தா | பா | த் | } | 5) 7 (1 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | 1 | 1 | 1 | 2 | } | 5 |

———

2 நீர். சந்திரன், சுக்கிரன்

———

அஹமதாபாத் ஜவுளி ஆலைகளுக்குப் பெயர் பெற்றது. ஆடவரும் பெண்டிரும் மனம் மகிழும் விதத்தில் பல்லாயிரக் கணக்கான மீட்டர்கள் கவர்ச்சிகரமான, நாகரீக டிசைன் களின் ஆற்று வெள்ளம் போல் உற்பத்தியாகி உலகெங் கிலும் பரவுகிறது. இதற்குக் காரணம் இரண்டாம் எண் ஆகிய அப்பு பூதமும், அதன் ஆதிபத்திய கிரகங்களான சந்திரன், சுக்கிரனே.

ஆக வாசகர்கள் இப்படி மதிப்பீட்டு எண்களை போட்டு அதன் கிரக ஆதிபத்தியம் இவைகளை தெரிந்து ஒரு நபரின் தராதரத்தை நிச்சயிக்கவும், அதேபோல மனித ஆயுளையும் ஐந்தால் வகுத்து வரும் மீதி அந்த பூதம், கிரகம் இவர்களின் ஆட்சியும், அதன் பலனும் அந்தந்த நட்பு, பகை—எண்ணின் ஆதிக்கத்தால் நடைபெறும் என்பதை கண்டு தெளிக.




## மூன்றாம் எண்

தமிழ்முறை எண் கணிதத்தில் இதுவரையிலும் அ, இ என்ற இரண்டு எழுத்துக்களிலும் அமைந்துள்ள ஒன்று

இரண்டு ஆகிய எண்களை தேர்வதும், அதன் ஆளுகை எப்படிப்பட்டது என்றும் கண்டோம். இனி அடுத்து வரும் எண் மூன்று. இது பூதங்களில் தேயுவாகிய தீ. இவற்றின் அணுவடிவம் முக்கோணம். தீ எரியும் போது கீழே பரந்து கோபுரம் போல உயர்ந்து கொழுந்து விட்டு ஜுவாலையுடன் எரிவதை கற்பனை செய்து பாருங்கள். அது முக்கோண வடிவத்தையே உணர்த்தும். இது பூத வரிசையிலும் எண் வரிசையிலும் 3. இப்பூதத்தின் ஆட்சிக்கு உட்பட்ட கிரகங்கள் சூரியன், செவ்வாய், கேது, இப் பூதத்தின் அதிதேவர் உருத்திரன் தேவதை பார்வதி. உடலில் உள்ள நான்காவது ஆதாரச் சக்கிரமான அநாகதத்தில் வீற்றிருப்பார்கள். இது ஆண் பால். இது உடம்பில் தொப்புளுக்கு மேல் கழுத்துவரை உள்ள பகுதி. நெருப்பின் அம்சம்.

தீ பூதத்திற்கு சூரியன், எல்லாவற்றிற்கும் மாற்ற இயக்கத்திற்கு முக்கியமானவன். செய்வாய் பூமியின் கர்ப்பத்தில் உள்ள பொருள்களுக்குள் உஷ்ணம். கேது மறைந்திருக்கும் பொய் உஷ்ணம் என்று கொள்ள வேண்டும்.

தீ பூதம் உடம்பில் தன் பாதி அம்சம் பசி, பிருதிவி அரைக்கால் பங்கு கூடினது நித்திரை. அப்பு அரைக்கால் பங்கு கூடினது தாகம்; வாயு அரைக்கால் பங்கு கூடினது சோம்பல், ஆகாயம் அரைக்கால் பங்கு கூடினது சங்கமம் அதாவது ஆண் பெண் சேர்க்கை. தீயின் இயல்பு கண்களில் இருக்கும். பொருட்களில் சுய உருவை நிச்சயிக்கும். உருவ விருத்தியே புத்தியாகச் செயல்படு கிறது. இது முக்கியமாக செயல்களையும், ஆராய்ந்து நிச்சயித்து உணரும். பசி தாகங்களுக்கு இப்பூதத்தின் ஆற்றலே காரணம்.

இப்பூத வரிசையில் தமிழ் எழுத்துக்கள் உ முதல் ஞ வரை 38ம் வடமொழி க்ஷு ஜு சேர்ந்து 42 எழுத்துக்களாகும்.

## இவர்களின் சரீர அமைப்பு :

மூன்றாம் எண்ணின் ஆதிக்கத்தில் உடையவர்கள் ஒல்லியான சரீரமும் நல்ல சிவந்த மேனியும், உயர மாகவும், வேகமாகவும் அழுத்தமாகவும் பேசக் கூடியவர் களாகவும், கணீரென்ற குரல் உடையவர்களாகவும் உயரிய நெற்றி, செம்பட்டை, அல்லது அடர்ந்து கருப்பு இல்லாத ரோமம். சிலர் வழுக்கைத்தலை உள்ளவர் களாகவும் இருப்பார்கள். இவர்கள் சதா சுறு சுறுப்பும், தீவிர ஆராய்ச்சியும் உடையவர்களாக இருப்பார்கள், எதிலும் தீட்சண்யமும் வேகமான மிடுக்கும் உடையவர்கள்.

## இவர்களின் மன இயல்பு:

இவர்கள் உணர்ச்சிகளால், உந்தப்பட்டு சீக்கிரம் முடிவுக்கு வருவார்கள். இவர்கள் தங்கள் மன எழுச்சியின் காரணமாக சீக்கிரம் நட்பும் வெகுவிரைவில் பகையும் சம்பாதித்துக் கொள்வார்கள். இவர்களிடம் சுய நலம் மிதமிஞ்சி நிற்கும். நல்லது கெட்டது, உற்றார் உறவினர், உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனப் பர்க்காது அவர்களின் மனவேகம், ஆத்திரம் காரணமாக பகைத்துக் கொள்வதுமன்றி நல்ல சந்தர்ப்பங்களை பாழ்படுத்திக் கொள்வர் அல்லது ஆத்திரத்தினால் காரியங்களில் மாட்டிக்கொண்டு தப்பிக்க வழிதெரியாது திகைப்பர். அல்லது லாபநஷ்டம் பாராது சொத்து பத்துக்களையும், காரியங்களையும், இழந்து நிற்பர்.

## இவர்களின் இலட்சியம்:

இவர்கள் வேகமாக முன்னேறத் துடிப்பது, எத் தகையத் தடைகளையும் உடைப்பது. சதா சிந்திப்பது, திட்டமிடுவது, ஓய்வு ஒழிச்சலில்லாமல் உழைப்பது இவர் களது சுபாவம் ஆகும். இவர்கள் பெரும்பாலும் சந்தேகப் பேர்வழிகள், முன்கோபிகள், பிடிவாதக்காரர்கள், எத்

துறையிலாவது நிபுணர்களாகும் பிரியம் உடையவர்கள். கரை கண்ட கல்வி கற்கும் திறன் இவர்களில் சிலருக்கு உண்டு. விஞ்ஞான நுட்பம், அணுஉலை, எலக்ட்ரானிக், என்ஜினியரிங், வைத்திய நுட்பம், மினரல், மெட்டல் போன்ற கல்வி, கலைகளில் தேர்ச்சிபெறுதல் ஆகியலட்சியம் உடையவர்கள், இவர்களில் வெகுசிலர். எதிலும் தீவிர மான முயற்சியுடன் வாழ்நாளில் எதையாவது சாதிக்க வேண்டும் என்ற தணியாத ஆசை சிந்தனை செயல், இவைகள் ஆக்கப்பூர்வமாக எதையும் இயற்றும் ஆற்றலை உண்டாக்கும். கோபம், வெறி இவைகள் காரியத்தைக் கெடுக்கும். இவர்கள் எப்பொழுதுமே ஆவேசம் உள்ள வர்கள். உணர்ச்சி வசப்பட்ட துடிதுடிப்பு உள்ளவர்கள். இவர்கள் தீவிர புரட்சிக்காரர்கள். ராணுவதளபதிகள் எழுத் தாளர்கள் ஆகிய துறையில் இருந்தால் மக்களை தூண்டி விடவும், புரட்சியைக் கிளப்பவும் இவர்களுக்கு ஆற்றல் உண்டு. மக்களின் நாடி நரம்புகளில் ஆவேசத்தையும் உணர்ச்சிகளையும் வெறிகளையும் ஊட்டிவிடுபவர்கள்.

இந்த பூதத்தின் ஆளுமையில் பிறந்த பெண்கள் அழகுள் ளவர்களாகவும், உணர்ச்சி உள்ளவர்களாகவும், சுதந்திரம் உள்ளவர்களாகவும், கலைகளை ஆர்வமுடன் கற்று சமூகத்தின் உயரிய வாழ்வை வாழ்பவர்களாகவும் குடும்பத் தலைவிகளாகவும், மன உணர்ச்சிகளை வாழ்வாகக் கொள்பவர்களாகவும் இருப்பார்கள்.

## இவர்களின் தொழில்:

இத்துறையில் தொழில் அதிபர்கள் என்றால் உலோகங் களை உருக்கி வார்ப்படம் செய்பவர்களாக விளங்குவார்கள். அலுமினியத் தொழிற்சாலை, செம்பை உருக்கி கம்பிகளா கவும், ஒயர்களாகவும் மாற்றுதல், எவர்சில்வர் பாத்திர உற்பத்தி, இரும்பு, பித்தளை, பொன், வெள்ளி போன்ற உருக்கினத்திற்கு மூன்றாம் எண்காரர்களே கர்த்தாக்கள்.

டீசல், பெட்ரோல், எரிபொருள், இரசாயன கலவைகள், மின்சார உற்பத்திக்கு வேண்டிய சாதனங்கள் (எலக்டிரிக் சாமான்கள்) சிமெண்ட், நீலக்கரி, தார் போன்ற எல்லா வகை ரசாயனத்திற்கும் மூன்றாம் எண்ணே மிகச்சிறந்தது. அனல் வகை இயந்திரங்கள் இதன் முக்கிய தாதுவாகும். இந்த எண் காரர்களால் நாட்டில் பெரும் மாற்றங்கள் ஏற்படும். தொழில், பொருளாதாரம், ஏற்றுமதி, இறக்குமதி, அரசியல் இவைகளில் முக்கியத்துவம் உள்ள வர்களாக விளங்குவார்கள். தொழில் அதிபர்களாக மகத் துவம் பெறுவார்கள்,

இவர்களில் மார்கழி முதல் வைகாசி முடிய அதாவது டிசம்பர் 16 ஜூலை 16 வரையில் பிறந்தவர்கள் மிகவும் புகழ் பெற்றவர்கள் ஆவார்கள். ஜூலை 16க்கு மேல் அதாவது ஆடிமுதல் மார்கழிவரையில் பிறந்தவர்கள் தன் ஆற்றல்களை வீணே கெடுதலுக்குப் பயன்படுத்துவார்கள். முன்கோபிகள்.

இவர்களில் பெரும்பாலானோர் இயந்திரங்கள், வாகனங்கள் இவற்றை இயக்குனராகவும், இரசாயன தொழிற்சாலைகளில் முக்கிய வேலை செய்பவர்களாகவும், பாத்திர உற்பத்தி, விற்பனை உரிமையாளர்களாகவும் ஆயில் பெட்ரோல், டீசல், விநியோகஸ்தர்களாகவும், மிலிட்டரி, ராணுவம், போலீஸ் இவைகளில் உயரிய சேவகம் செய்பவர்களாகவும் தீப்பெட்டி, போன்ற எரி பொருள் தயாரிப்புத் தொழில்கள், மருந்துக் கடைகள், எலக்ட்ரிக் கடைகள், காஸ் லைட், ஸ்டவ் போன்ற வியாபார ஸ்தாபனங்களை நடத்துபவர்களாகவும் நிறையப்பேர் இந்த வகையில் இருப்பார்கள்.

இதில் தேய்பிறையில் பிறந்தவர்கள் கொஞ்சம் கஷ்டத்தையும், எங்கும் எதிர்ப்புக்களையும் அடைய நேரிடும். எதிலும் சவால், எதிர் நீச்சல் தான்.

இவர்களின் சுவை, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு. இவர்களின் ராசியான நிறம் சிகப்பு. ரத்தவர்ணம்.

## இவர்களின் வியாதிகள்

இவர்களுக்கு வரும் வியாதிகள் மனம் சம்பந்தப்பட்டவையே ஆகும். ஓயாத சிந்தனை, கவலை, காமம், வெகுளி, கோபம் போன்ற உணர்ச்சிகளால் உந்தப்பெற்று உஷ்ண வியாதிகள் ஏற்படும். ரத்த பித்தம், க்ஷயம், அம்மை, உஷ்ணக் கட்டிகள், கழலை, ரத்த அழுத்த நோய் (பிளட்பிரஷர்) கண்வியாதி, பல் வியாதி இவைகள் ஏற்படும்.

இவர்கள் பவள பஸ்பம், சிலாசத்து பஸ்பம், சிருங்கி பஸ்பம், தாளகச் செந்தூரம், அயச் செந்தூரம் போன்றவைகளை சாப்பிடலாம்.

இவர்களின் நல்ல நாட்கள் ஞாயிறு, செவ்வாய் கிழமைகள் என்று கொள்ள வேண்டும். இவர்கள் எப்பொழுதும் சிவப்பு அடையாளம் ஒன்றை தன் கையில் வைத்திருப்பது நல்லது. சிகப்பு நிற பேனா, சிகப்பு நிற டைரி, சிகப்பு கைக்குட்டை சிகப்பு டாலர் இவைகள் போன்று ஏதாவது கையில் வைத்திருக்கலாம்.

ஆனி, ஆடி மாதங்களாகிய க்ரீஷ்மருது இவர்களுக்கு விசேஷ காலம். இவர்களுக்கு ஒத்துக்கொள்ளாத எண் 2. இந்த இரண்டாம் எண்காரர்களால் இவர்கள் எதிர் காலத்தை கெடுத்துக் கொள்வார்கள். அல்லது கெடுக்கப் படுவார்கள். மு, கருணாநிதி 2-ம் எண் கண்ணதாசன் மூன்றாம் எண் இருவரும் கலை எழுத்து துறையில் இருந்தாலும் இவர்கள் உள்ளூர பகைவர்களாக இருந்திருக்கிறார்கள். ஆனால் எம். ஜி. ஆர். ஒன்றாம் எண்காரர், கண்ணதாசனுக்கு கடைசி காலத்தில் ஒரு பதவியைக்

கொடுத்து ஆதரித்தார். ஆக 3-ம் எண்காரர்கள் இரண்டாம் எண்காரரை வியாபாரங்களில் கூட்டுச் சேர்த்துக் கொள் வதில் லாபம் இல்லை, தண்ணீரும் நெருப்பும் பகைதானே. இந்த உண்மையை அனைவரும் ஒத்துக்கொள்ள வேண்டும்.

## 3-ம் எண்காரர்களின் பலவீனம்

இவர்கள் பெண்களிடம் மனதைப் பறிகொடுப்பர். மனைவியின் மீது அன்பாக இருப்பார்கள். சரியில்லாத மனைவி அமைந்துவிட்டால் வீடு போர்க்களம் நரக மாகவே மாறிவிடும். அதேபோலத்தான் 3-ம் எண் பெண் களுக்கு கணவன் சரியில்லாவிட்டால், வீட்டில் நெருப்பையே கொளுத்திவிடுவாள். தானும் நெருப்பிட்டுக் கொள்வாள்.

இந்த மூன்றாம் எண் நபர்கள் அனைவரும் தங்கத்தில் முக்கோணச் சின்னமாக ஒரு மோதிரம் செய்து அதில் நல்ல ஜாதி செகப்புக்கல், மாணிக்கம், கெம்பு போன்றவைகளைப் பதித்து மோதிரமாக அணிந்து கொள்ளலாம்.

இவர்கள் சூரிய காயத்திரி, சூரியவழிபாடு, செவ்வாய், கேது இவைகளின் ஸ்துதிகளை படித்தும் வரலாம். இவர்களுக்கு மத்திம ஆயுள் என்று தான் சொல்ல வேண்டும்.

இவர்கள் இப்பூதத்தின் அதிதேவர்களான உருத்திரன், பார்வதி இவர்களை வழிப்பட்டு வர நல்லது

இனி இப்பெயரில் அமைந்த பெயர்கள், ஸ்தா பனங்கள், தொழில்கள் இவைகளை உதாரணத்திற்கு பார்ப்போம்.

இவ்வெண்ணின் அதிபதி— உருத்திரன்

| | | | |
|---|---|---|---|
| உ ரு த் தி ர ன் | | | 5) 13 (2 |
| 3 3 2 2 1 2 | | — | 10 |
| | | | ——— |
| | | | 3 தீ பூதம் 3ன் ஆளுகை |

ஆகவே சங்காரம் செய்யும் தொழிலுக்கு உருத்திரன் அதிதெய்வமாக இயற்கையில் அமைந்திருக்கிறார். உருத்திரன் தீமைகளை அழித்து பக்குவம் என்னும் மேன்மையை ஜீவர்களுக்கு கொடுப்பவர்.

பெட்ரோல் என்னும் எரிபொருள் என்பதைப்பாருங்கள்.

| | | | |
|---|---|---|---|
| பெ ட் ரோ ல் | | | 5) 13 (2 |
| 4 2 5 2 | | — | 10 |
| | | | ——— |
| | | | 3 தீ—சூரியன் செவ்வாய், கேது. |

பெட்ரோல் என்னும் பெயர் மூன்றாம் எண்ணான தேயு என்னும் தீயின் அம்சமும் ஆளுகையும் பெற்ற தினால் உலகத்தில் பெட்ரோலுக்கு ஏற்பட்டிருக்கும் கிராக்கியை அனைவரும் அறிவோம். இந்த பெட்ரோல் என்னும் தீ தீவிரமானது. உலக நாடுகளின் முற்போக்கு சக்திகளுக்கும், போக்குவரத்துக்களுக்கும், பெட்ரோலியப் பொருள்களின் அத்தியாவசியமான உற்பத்திகளுக்கும் அவசியம் தேவையுள்ளதால் இது கிடைக்கும் நாட்டுடன் பல நாடுகள் நட்புறவு கொள்ள போட்டி போட்டுக் கொண்டு செல்கிறது. பல்லாயிரக்கணக்கான மைல்களை மனோ வேகமாக பெடரோலின் உதவி கொண்டு சிலமணி நேரத்தில் உலகத்தையும் ஊரையும் விமான மூலமும், கார் மூலமும் சுற்றி வருகிறோம். அகில உலகத்தையும் ஆளும் சக்தி பெட்ரோலுக்கு வந்த காரணம் அது மூன்றாம் எண்ணாகவும் தேயுபூதமாகவும் அமைந்த காரணமே.

| | | | |
|---|---|---|---|
| ப ஸ்<br>1 2 | — 3 தீ. | கா ர்<br>1 2 | — 3 தீ. |

ஆக இந்த பஸ், கார் என்பதெல்லாம் 3ம் எண்ணின் ஆதிக்கத்தில் உள்ளது. இதை இயக்குவது பெட்ரோல் என்ற மூன்றாம் எண். ஆகவே மூன்றின் பூதத்தில் அமைந்து விட்ட எண்கள் அப்பூதத்தையே ஆதாரமாகக் கொண்டு இயங்கும் கூட்டுத்தன்மை அமைந்ததால் இது மக்கள் வாழ்க்கையிலும், உலக வாழ்வின் அடிப்படை வளர்ச்சிக்கும், அத்தியாவசியமான தேவைப்பொருளாக அமைந்து விட்டதைப் பாருங்கள். என்ன வியப்பு!

ஜார் | —3 தீ பூதம், அதிபர்கள் சூரியன், செவ்வாய்,
1 2 | கேது.

ஜார் என்ற இந்த பெயரையுடைய மன்னன் உலக சரித்திரத்தில் தன் பெயரை நாட்டினான். கொடுங்கோன்மை மன்னன் உலகத்தை தானே வியாபித்து ஆள வேண்டுமென்ற ஆசைத் தீ,வேட்கை அவனைத் தூண்டியது. அதை மூன்று கிரகங்களான சூரியன், செவ்வாய், கேது ஆகியவர்களின் பலம் கொண்டு கொடுமைகளைச் செய்தான். நெப்போலியனுக்கும் ஜார் மன்னனுக்கும் எத்தனையோ வித்தியாசங்கள். முன்னது 1 பின்னது 3.

கண்ணதாசன் | — 5) 8 (1
1 2 1 1 1 2 | 5

——

3 தீ.

———

கண்ணதாசன், மனதில் அளவற்ற வேட்கை உள்ளவர். உணர்ச்சிவசப்பட்டவர். மனதில் அனல் நிரம்பியவர்.உஷ்ண வீரியமாகிய மது பானங்களைக் குடித்தார். அவர் பிறர் மனங்களில் வேதனைத் தீ, காதல் தீ, காமத் தீ, பிறக்கும்படியான காதல், சோகம், உணர்ச்சிமயமான பாடல்களை, கவிதை

களைப் பாட முடிந்தது. ஆனால் அவரின் கூட்டாளிகள் 1, 2 எண்களாக அமைந்துவிட்டதினால் அவர்களோடு சேர்ந்து அரசியலில் பிரகாசிக்க முடியவில்லை. எதிர்ப்புக்களே மேலோங்கியது. இவரது சிந்தனை, வேட்கை, தாகம் என்பது கவியாற்றலாக இந்த 3 - ம் எண்ணின் பூதமும், கிரகமும் கொடுத்தது. தமிழ்ச் சமூகத்தின் இலக்கிய வளர்ச்சியில் சூரியனைப்போல் பிரகாசம் பெற்றார். கேதுவைப் போல் தத்துவம் கூறினார். செவ்வாயைப் போல் பகைவர்களை எதிர்த்து நின்று வெற்றி கண்டார்.

இந்த மூன்றாம் எண் வரிசையில் ஷேக்ஸ்பியர், ஷெல்லி போன்ற ஆங்கிலக் கவிஞர்கள் இடம் பெறுகிறார்கள்.

ர தி | — 3 தீ
1 2 |

இந்தப் பெயர் — அனைவருக்கும் தெரியும், மன்மதனின் நாயகி. இவள் உலகத்தில் காமத்தீயை ஊட்டுபவள். விரகதாபத்தை ஏற்படுத்துபவள். இது தீயின் செயல்தானே.

து ர் க் கா பூ ர் |
3 2 2 1 3 2 | — 5) 13 (2
10
———
3 தீ.
———

துர்க்காபூர் என்னும் வட இந்தியாவில் உள்ள நகர், இரும்பு எஃகு ஆலைகளுக்கு உருக்கி வார்க்கும் வார்ப்படங்களுக்குப் பெயர் பெற்ற நகரம் என்பது நமக்குத் தெரியும்.

இப்படிப் பல உதாரணங்களைச் சொல்லிக் கொண்டே போனால் கட்டுரை நீளும். ஆகவே வாசகர்கள் இந்த நுட்பங்களையும், தீர்மானங்களையும், கண்டு பிடிப்பு களையும் விளங்கிக் கொண்டு நீங்களே ஆராயுங்கள். தமிழ் எண் கணிதம் வியப்பூட்டும்.

ஆ ங் கி ல ம்
1 2 2 1 2 } — 5) 8 (1
5
———
3 தீ. சுடர்வது, சுடுவது.
———

மற்ற மொழிகளை கொளுத்தியது ஆங்கிலத் தீயே. உலகத்தின் பல மொழிகளை தீயிட்டுக் கொளுத்தி தீமைப்பயந்த மொழி ஆங்கிலம் ஒன்றே. நாட்டின் மொழிகளை கலைகளை இலக்கியங்களைக் கொளுத்தி— தான் கொழுத்து செழித்த மொழி ஆங்கிலம்.




## நான்காம் எண்

தமிழ்முறை எண் கணிதத்தில் நான்காவது காற்று பூதம் இதன் எண் 4. இதன் எழுத்து எ. இதன் அணு வடிவம் இரு முக்கோணங்கள் புணர்தலால் ஏற்படும் அறுகோண வடிவம். இந்த காற்று பூதத்தின் ஆளுகைக் கிரகம் புதன். இதன் அதிதேவர் மகேஸ்வரன்; தேவதை மகேஸ்வரி. இப்பூதத்தின் வரிசையில் அடங்கும் எழுத்துக்கள் 'எ' முதல் 'னே' வரையிலும் ஜெ, ஸெ. ஷெ, க்ஷெ போன்ற வடமொழி எழுத்துக்களும் சேர்ந்து மொத்தம் 42 எழுத்துக்களாகும்.

உடம்பில் வாயு தன்னம்சம் பாதி மோகம். வாயு வோடு பிருதிவி $\frac{1}{8}$ பங்கு கூடினது படுத்தல், வாயு வோடு அப்பு $\frac{1}{8}$ பங்கு கூடினது நடத்தல், வாயுவோடு அக்கினி $\frac{1}{8}$ பங்கு கூடினது இருத்தல், வாயுவோடு ஆகாயம் $\frac{1}{8}$ பங்கு கூடியது தாண்டல்.

## இவர்களின் சரீர அமைப்பு

மாநிறமும், சற்றே கருப்பு கலந்த சாயலும் உள்ள உடம்பினர். மெலிந்த தேகத்தினர், நீண்டமுகம், நீண்ட கைகள், நீண்ட மூக்கு, மிருதுவான உதடுகள், நல்ல எடுப்பான முன் நெற்றி, நரம்பு எழுந்து ஓடிய மெலிந்த விரல்களுடன் கூடிய கை. கருப்பும் செம்பட்டையும் கலந்து தலைமுடி. வேகமாக நடக்கக்கூடியவர்கள். அவசர மாகப் பேசக்கூடியவர்கள். சதா சிந்தனையுடையவர்கள். இவ்வரிசையில் பிறந்த பெண்கள் மெலிந்த தேகமும் மிகச் சுறு சுறுப்பும், பட்டுப்போன்ற கூந்தலும், ஓசையில்லாமல் நடப்பவர்களும், சன்னக்குரலில் பேசுபவர்களும், சதா மனதில் எதையாவது ஒன்றை திட்டமிட்டுக் கொண்டிருப் பவர்களும், பரிசுத்தமாக இருப்பவர்களாகவும் இருப் பார்கள்.

## இவர்களின் மன இயல்பும் இலட்சியமும்

இவர்கள் இலக்கியம், விஞ்ஞானம் இவைகளில் அதிக ஈடுபாடு கொண்டு விரிவான படிப்பும் ஆராய்ச்சியும் உடை யவர்கள். சட்டமும், உடற்கூறும் சிலர் படித்து புகழ் பெறுவர். எழுத்தாற்றல் இவர்களுக்கு உண்டு, உயரிய ஞானம், ஆராய்ச்சி, எழுத்துத் துறையில் ஈடுபட்டால், மக்களைக் கவரும் ஆற்றல் இவர்களுக்கு உண்டு. எதிலும் எளிய இலாவகமான முறைகளையே கையாள்பவர்கள். எப்பொழுதும் ஒய்ந்து கிடக்க மாட்டார்கள். காரணம் காற்றின் குணம் நடத்தல், ஓடல், இருத்தல், கிடத்தல்,

தாண்டல் போன்ற அலையும் தன்மை உடையது. மனதை 'இதைச்செய்' 'இப்படிச்செய்' என்ற தூண்டும் தன்மை உடையது. இவர்கள் புளிப்பு உவர்ப்பு இந்தச்சுவைகளை அதிகம் விரும்பி சாப்பிடுவார்கள். பச்சையானதும், நீல நிறமானதுமான வண்ணங்களில் ஈடுபாடு அதிகம் ஏற்படும்.

இந்த பூதத்தின் ஆளுகைக்கு உட்பட்டவர்கள் தூதுவர்களாகவும், பிரயாண ஏஜண்டுகளாகவும் செய்திப் பத்திரிகை ஆசிரியர்களாகவும், பத்திரிகை உரிமையாளர்களாகவும், கற்பனையாளர்களாகவும், விமான இலாகா, இரயில்வே இலாகா, கப்பல்துறை, தபால்தந்தி இலாகா, சுற்றுலா ஏஜன்சி, பார்சல் சர்வீஸ், போக்குவரத்துத் துறை இவைகளில் ஈடுபட்டவர்களாகவும் இருப்பார்கள். நீதித்துறை ஆலோசகர்கள், சட்ட ஆலோசகர்கள், ஆடிட்டர்கள், வக்கீல்கள், போன்ற ஆலோசகத் துறைகளில் முக்கிய பொறுப்பு வகிப்பார்கள். சிலர் வியாபார ஏஜென்சி, போதனையாளர்களான ஆசிரியர், கல்லூரி விரிவுரையாளர், சிற்பி தத்துவ ஆராய்ச்சி வான சாஸ்திரம், கணிதம், இயக்குனர்களாகவும் இருப்பார்கள்

இவர்களின் மனம் சதா ஓயாது வேலையில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கும் இவர்கள் சில வேலைகளில் சந்தர்ப்ப வசத்தால் மாட்டிக்கொள்வார்கள். காற்றானது அருவிக்கரைப்பக்கம் போனால் குளிர்க் காற்றாகவும், நெருப்பு பக்கம் போனால் அனலின் வெம்மையாகவும், மலர்ச் சோலைக்குப் போனால் மலரின் மணத்துடனும் தன்னை மாற்றிக் கொள்கிறது. ஆகவே இவர்கள் சூழ் நிலைகளைப் பொறுத்து தங்களை உருவாக்கிக் கொள்ளும் குணத்தினர். அதே சமயம் பிறரை மாற்றியமைக்கும் குணம் உள்ளவர்கள். எதிலும் சலிப்படையமாட்டார்கள். எதையும் ஊடுருவிப்பார்க்கும் தந்திரமும் ஆற்றலும் உடையயவர்கள் இவர்கள் குற்றவியல் புலன்விசாரணை, போலிஸ் இலாகா இவைகளில் அபாரமாகச் செயல்படக் கூடியவர்கள்.

பத்திரிகை, எழுத்துத் துறை சம்பந்தப்பட்டவர்கள் கருத்துக்களை வெகு இலாவகமாக மக்கள் மனதில் புகுத்தி விடும் ஆற்றல் பெற்றவர்களாகத் திகழ்வார்கள். இந்த பூதத்தின் அம்சத்தில் பிறந்தவர்கள் ஒவியம், சிற்பம்

போன்ற கற்பனைப் படைப்பில் கைதேர்ந்தவர்களாக விளங்குவார்கள்.

இந்த எண்ணில் பிறந்தவர்கள் சதா பிரயாண இச்சையுடையவர்களாக இருப்பார்கள். தூரதேச பிரயாணங்கள் அடிக்கடி இவர்களுக்கு ஏற்படும்.

## இவர்களுக்கு ஏற்படும் நோய்கள்:

இவர்களுக்கு ஜீரணக் கோளாறு, மலச்சிக்கல், வாய்வு உபாதைகள் நரம்புகள் பலவீனப்பட்டு நடுக்கம், உடலில் அதிக சுருக்கம், சந்தேகம் இவைகள் ஏற்படும். மூளை வியாதிகள், பயித்தியத்தன்மை, ஞாபக மறதி, வரட்டிருமல், காது, மூக்கு, தொண்டை போன்ற இடங்களில் உபாதைபள் ஏற்படும். அதிகமாக நரம்புத் தளர்ச்சி உண்டாகும். தோல் வியாதியும் ஏற்படும்.

இவர்கள் அயக்காந்த செந்தூரம், தங்கபஸ்பம், பவள பஸ்பம், வங்க பஸ்பம், போன்ற உலோக பௌதிக மருந்துகளைச் சாப்பிட்டு வரலாம்,

இவர்கள் தங்கத்தில் இரண்டு முக்கோணங்களை புணர்ந்தாற் போல அறுங்கோண வடிவில் சின்னம் செய்து அதன் நடுவில் பச்சைக்கல் பதித்த மோதிரம் அணிந்து வருதல் நல்லது. அல்லது அறுகோணச் சக்கரத்தில் வாய்வு பீஜத்தை எழுதி வழிபட்டு வருவதால் வாழ்வில் கோரிய நல்ல பலன்கள் கிடைக்கும்.

கிரகங்களின் புதன் இவர்களுக்கு நல்ல யோசனைகளையும், ஆற்றல்களையும் கொடுக்க வல்லவன். மேலும்

இந்த பூதத்தின் அதிதெய்வங்களான மகேஸ்வரன், மகேஸ்வரியை வழிபட்டு வருதல் எல்லா நன்மைகளையும் பெறச் செய்யும்.

இவர்களுக்கு புதன்கிழமைகளும், ஆடி, ஐப்பசி, கார்த்திகை, மாதங்களும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்,

ம து
1 3 — 4 இதன் எண் 4

இது காற்று பூதம்—இது ஏன் மனித இனத்தை பரவலாக மனத்தில் புகுந்து பேய்க் காற்றாக வீசிக் கொண்டிருக்கிறது யோசியுங்கள். இதைப்பற்றி அதிகம் நான் எழுத வேண்டியதில்லை. உங்களுக்கே புரியும்.

இனி இப்பூதத்தின் ஆட்சி பெற்ற எண் நான்கு வந்துள்ள பெயர்களைப் பார்ப்போம்.

த பா ல்
1 1 2 —4 காற்று

இந்த தபால் இலாகா இந்த பூதத்தின் அம்சத்தில் உள்ளதால் இது வீடுகள் தோறும், தபால்களை தவறாமல் கொண்டு வந்து சேர்க்கிறது, இது காற்றின் அம்சம்.

போ லீ ஸ்
5 2 2 — 5) 9 (1
5
———
4 காற்று

போலீஸ் இலாகாவும் கண்காணித்தல், குற்றவாளிக்களைத் தேடுதல் போன்ற காரியங்களிலும ஈடுபட காரணம் இந்த 4ம் எண்ணும் காற்றும் அம்சமும் ஆகும்.

சேரன் போக்குவரத்து கழகம்
4 1 2 5 2 3 1 1 2 3 1 1 ட 2 — 5) 29 (5
25
———
காற்று 4
———

சேரன் போக்குவரத்து கழகம் தமிழகத்தில் ஒழுங்காகவும் பெருமையாகவும் இயங்கி வருகிறது. அதிக அளவு எண்ணிக்கையுள்ள பிரயாண பஸ்களும், ஊழியர்களும், சுறுசுறுப்பாகவும் மெச்சத் தகுந்த படியும் இயங்கி வருகின்றது.

ஜயில்சிங்
1 2 2 2 2 — 5) 9 (1
5
———
4 காற்று
———

ஜயில்சிங் என்பவர் இன்று இந்தியாவின் 7வது ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றார். இவர் பெயர்ப்படி நாலாம் எண் பூதமான காற்றின் அம்சத்தையும் புதனின் ஆளுகையிலும் உட்பட்டிருக்கிறார். இவருடைய பதவிகாலத்தில் துரிதகதியில் நாட்டின் முக்கிய பிரச்சினைகள் தீர்க்கப்பட இருக்கிறது. மக்களின் மனதில் திருப்தி குதூகலமான விஷயங்கள் இவரின் பதவி ஏற்புக்குப் பின் நடக்க இருக்கிறது. பாரதம் என்ற 5ம் எண் ஆகாய பூதத்திற்கு 4ம் எண் உள்ள ஜயில்சிங் முக்கியத்துவம் வாய்ந்தவர் ஆவார் என்பதை அடுத்து நடைபெற இருக்கும் சம்பவங்கள் எடுத்துக்காட்டும். இந்தியாவின் பிரதமர் இந்திராகாந்தியின் எண் 2. ஜயில்சிங் 4. பாரதம் 5. ஆகவே 2.4,5 என்ற எண்கள் முக்கியத்துவம் வாய்ந்தது. நீர், காற்று' ஆகாயம் மூன்றும் ஒரு நாட்டிற்கும் மக்களுக்கும் அத்தியாவசியம் ஆனது. ஆகவே நாட்டில் அத்தியாவசியம் மிகுந்த

நடவடிக்கைகள் உருவாகப்போகிறது ஜயில்சிங் ஜனாதிபதியானது 66 வயதில், இந்த 66ஐ

5) 66 (13
65
———
1
———

ஆகவே ஜயில்சிங் ஜனாதிபதியானது 14 வது பரிவிருத்தி நடப்பு— இவரது எண் 4.

5) 14 (2
10
———
4 என்பது முக்கியத்துவம்.
———

14 வது பரிவிருத்தியில் முதலாவது மாதமும் பூமியாகிய பிருதிவி பூதத்தின் துவக்கம். ஆக இவர் தனது 70—71 வயது வரையிலும் ஜனாதிபதியாக உயர்த்தப்பட்டிருப்பதை வாசகர்கள் கண்டு உணர்க. வாய்ப்பு எப்படி உண்டாகிறது என்பதை கணித்து அறிக.

| ஜெ ய ல லி தா | | 5) 9 (1 |
|---|---|---|
| 4 1 1 2 1 | — | 5 |
| | | ——— |
| | | 4 காற்று |
| | | ——— |

ஜெயலலிதா திரை உலகில் பிரகாசித்தார்—பின் அரசியல் உலகில் பிரவேசித்தார். அவரைப்பற்றி செய்திகள் பலவிதமாக பரவிக்கொண்டிருக்கிறது. அவரது பெயர் எண் 4. நான்கு என்பது காற்று பரவலாக வீசப்படுவது மட்டுமல்ல. பரவலாகப் பேசப்படுவதும் கூட. ஆக ஜெயலலிதா அரசியலில் நுழைந்துவிட்டார். அவரைப் பற்றி பரவலாகப் பேசப்படுகின்றது.

காற்று — சந்தர்ப்ப வசப்படி போகாமல் தனது பலத்தை பிரயோகித்தால் அதுவும் சுயபலத்தை பிரயோகித்தால் நாடு முழுவதும் பெயர் பரவும். அவரது பிறப்பு எண்ணும் வயது எண்ணும் தான் அவரது வாழ்வு திசை திருப்பப் காரணமாக இருக்கும்.

| | | | |
|---|---|---|---|
| அடுத்து | பா ர தி | | |
| | 1 1 2 | — | 4 காற்று. |

பாரதி எனும் பெயரை எடுத்துக் கொள்ளுங்கள். இது காற்றின் அம்சத்தை உடையது. இது புயலாகவும், தென்றலாகவும் பாரதியிடம் நடைபழகியது.

பாரதி பல உணர்ச்சியூட்டக்கூடிய பாடல்களைப் பாடி சுதந்திர தாகத்தை மக்களின் நாடி நரம்புகளில் ஊட்டி எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு என்று மக்களை முடிவு செய்ய வைத்தார்.

குழந்தைகளோடு சேரும் பொழுது குழந்தைகளாகவும், புரட்சிக்காரர்களோடு சேரும் பொழுது புரட்சிப்புயலாகவும் ஆனார். இன்று அவரது பாடல் எங்கும் காற்றில் கலந்து ஒலிக்கிறது. இன்று அமரகவி பாரதியின் நூற்றாண்டு விழா தமிழகம் எங்கும் கொண்டாடப் படுகிறது. பாரதி சரியான நான்காம் எண் பேர்விழி. மக்கள் மனதில் நிறைந்தது மட்டுமல்லாமல், அவன் வாழ்ந்த காலத்தில் அச்சம், பேடிமை, அறியாமை இவைகளை துரத்தினான். சுதந்திர உணர்ச்சியை ஊட்டினான். பாரதி ஒரு காற்றின் புயல் வேக உந்து சக்தியாகவும், தென்றலின் இதமாகவும் வாழ்ந்தார். அதற்கு 'பாரதி' என்னும் நான்காம் எண்ணே காரணம்.

| | | |
|---|---|---|
| பை ர ன் | | |
| 1 1 2 | — | 4 காற்று |

பைரன் என்ற ஒரு ஆங்கிலக்கவி, உலக முழுவதிலும் அவனது பெயரும் கவிதையும் தெரியும். ஆகவே அந்தப் புகழும், பெயரும், கவித்துவத்திற்கும் காரணம் 4ம் எண்ணே.

| | | |
|---|---|---|
| த மி ழ் நா டு | | — 5) 9 (1 |
| 1 2 2 1 3 | | 5 |
| | | 4 காற்று |

தமிழ்நாடு என்கின்ற போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே. தமிழ்நாடு என்றால் உலகம் பூராவும் அறியும். இந்தியாவுக்குள் தமிழ்நாடு மாணிக்கமாக மணியாகத் திகழ்ந்து வருகிறது. தமிழ்நாட்டைப்பற்றி பரவலாகப் பேசப்பட்டும் வருகிறது.

| | | |
|---|---|---|
| கு மு த ம் | | —5) 9 (1 |
| 3 3 1 2 | | 5 |
| | | 4 காற்று. |

தமிழ் வாரப்பத்திரிகைகளிலேயே கு மு த ம் அதிகம் விற்கப்படும் பத்திரிகை. மக்கள் மனதில் குமுதம் வாங்க வேண்டும் என்ற தவிப்பு இருக்கும். குமுதத்தில் எந்த விஷயம் வந்தாலும் கவலை இல்லை. அந்தப் பெயரிலே மனம் ஆசைவைக்கிறது. ஆகவே குமுதம் என்ற பெயர் காற்று எண்ணாகிய நான்கில் வந்ததாலும் இதன் கிரகம் புதன் ஆனதாலும், பல லட்சக்கணக்கான மக்கள் மனதிலும் குடும்பங்களிலும் அலைகிறது என்பது காற்றின் விஷயம். இதில் உண்மை இருக்கிறதின் காரணம் புரிந்திருக்கும்.



## ஐந்தாம் எண்ணின் சிறப்பு:

தமிழ் முறை எண்கணிதத்தில் இறுதியாக நிற்கும் எண் ஐந்து. இதுவே ஆகாயம். இதற்கு மேலானது எதுவும் இல்லை. எல்லா எண்களும் எல்லா தத்துவங் களும் இதிலேயே ஒடுங்க வேண்டும். இந்த ஐந்து என்பது இறுதியானது. முடிவு ஐக்கியம், மோட்சம், இறைவன் என்று தான் கூறவேண்டும். இறைவனுக்கு ஐந்தொழில், அவனை அடைய வேண்டின் அவனது பஞ்சாட்சரத்தை உணர வேண்டும். ஆகவே வாழ்க்கையின் மிக உயர்ந்த நிலையே ஐந்தாவது. இந்த ஐந்தாவது பேறு கிடைக்கப் பெற்றவர்களே புண்ணிய சாலிகள். மகாத்மாக்கள். மகாத்மா என்றாலே ஐந்தாம் எண் என்று பொருள். இது ஆகாய பூதமானதினால் மிகவும் உயர்ந்துவிட்ட நிலை மட்டுமல்ல எங்கும் வியாபித்து நிலைத்து இயங்கிக் கொண் டிருப்பதும் இயங்க வைப்பதும் ஆகும். ஆகாயத்தின் சின்னம் பூரணமாக வட்டம். இதன் எழுத்து ஓ. ஓ என்பது பிரணவத்தின் ஆதாரம். ஓம் என்கின்ற போது வேதத்தின் முடிவான பொருளை உணர்த்தி நிற்கும். ஓம் என்பது இறைவனின் விஸ்வரூபத் திருமேனியாகும். இந்த பூதத்தின் ஆதிதேவர் சதாசிவம். தேவதை மனோன்மணி இவர்கள் சகஸ்ரதளம் என்னும் ஏழாவது ஆதாரத்தில் உள்ள ஆயிரம் இதழ் தாமரையிலே இருப் பவர்கள். இந்நிலையில உள்ள பிருமமா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன் இவர்களை இயக்கும் தலைமையானவரே சதாசிவம் இவர் சதாக்கிய கலையைக் கொண்டு கால

புருஷ தத்துவத்தையும், புவனங்களையும் இயக்கக் கூடியவர்.

உடம்பில் இந்த ஆகாய தத்துவம் நெற்றி முதல் உச்சிப் பகுதிவரை அமைந்ததாகும். இதன் நிறம் கருப்பு. இதன் சுவை கசப்பு. இதன் கிரகங்கள் சனி, ராகு.

உடம்பில் ஆகாயத்தின் தன்னம்சம் பாதி மோகம், பிருதிவி $\frac{1}{8}$ பங்கு சேர்ந்து ராகம், அப்பு $\frac{1}{8}$ பங்கு அம்சம் சேர்ந்தது துவேஷம், வாயு $\frac{1}{8}$ பங்கு சேர்ந்தது பயம், அக்கினி $\frac{1}{8}$ பங்கு சேர்ந்தது வெட்கம்.

## இப்பூதத்தின் ஆளுகையில் பிறந்தவர்கள்

இப்பூதத்தின் ஆளுகைக்கு உட்பட்டவர்கள் குளிர்ச்சியும் வறட்சியும் உள்ள சரீரத்தைப் பெற்றிருப்பார்கள். இவர்கள் நடுத்தர உயரமாகவும், மெலிந்த சரீர முள்ளவர்களாகவும், எடுப்பான பரந்த முன்நெற்றி உள்ளவர்களாகவும், வாழ்வில் கசப்பான நிகழ்ச்சிகளை சந்திப்பவர்களும், அதிர்ஷ்டத்தை உதறித்தள்ளும் துர்ப்பாக்கியசாலிகளாகவும், தனக்குத்தானே சமாதானம் செய்துகொள்ளும் மனத்தினராகவும் இருப்பார்கள். நீண்ட கைகள் நீண்ட கால்கள் பெரிய உயர்ந்த லட்சியத்துடன் கூடிய யோசனை இவர்களுக்கு அமைந்திருக்கும். இவர்கள் தைரியசாலிகளாக இருப்பார்கள். பரந்த மார்பு, வீரர்களைப் போல அச்சமின்றி நடக்கும் சுபாவம் பெருமிதம், தன்னம்பிக்கை, அதே நேரத்தில் சோர்வு இவைகளில் பீடிக்கப்படுவர். இவர்களின் மன இயக்கமே சரீரத்தின் ஊக்கமும், நலிவுமாகும்.

## இவர்களின் குணநலன்கள்:

இந்த ஐந்தின் ஆளுகைக்குட்பட்டவர்கள் மதக்கோட்பாடுகளில் உயரிய ஒழுக்க நெறியிலும், இறைவன்மீது

பற்றுக் கொண்டவர்களாக இருப்பார்கள். மதத்தலைவர்கள், மடாதிபதிகள், வேதசாஸ்திர பயிற்சி பெற்றவர்கள், மதபோதகர்கள், மக்களின் வழிகாட்டிகள், மக்களைச் சீர்படுத்துபவர்கள், நாட்டைச் சீர்படுத்துபவர்கள், வரலாற்றை மாற்றியமைக்கும் சரித்திர புருஷர்கள் மக்களால் வணங்கப் பெறும் உயரிய பண்பாளர்கள், சிந்தனையாளர்கள், ஆசிரியர்கள், விரிவுரையாளர்கள், பல்கலைக் கழக அமைப்பாளர்கள், தத்துவ, சமய நூல்களின் உரையாசிரியர்கள், உயரிய ஓவிய வல்லுனர்கள் எவ்விதத்திலும் நாடு, மக்கள், மொழி, இவற்றிற்கு பயன்பட வழி காட்டுபவர்கள் என்றும் கொள்ளலாம்.

இன்னும் வானவெளி ஆராய்ச்சியாளர்கள், கோள்கள், நட்சத்திரங்கள் இவைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்பவர்கள் ஜோதிடக்கலையில் பிரசித்திபெற்றவர்கள் என்றும் கூறவேண்டும்.

## இவர்களின் தொழில்கள்:

விமான சர்வீஸ், மலைத்தோட்டம் (எஸ்டேட்) இவைகளுக்கு உரிமையாளர்களாகவும் விளங்குவார்கள். மேல்நாட்டு செல்வாக்கு, அடிக்கடி வெளிநாட்டுப் பிரயாணம், வெளிநாட்டுப் பொருளாதார தொழில் வாய்ப்பு உள்ளவர்கள், விமானப் பயணிகள் இந்த வரிசையில் அடங்குவார்கள்.

மேலும் கோயில் சிற்பங்களை நிர்மாணிப்பவர்கள், பிரபல கலை அம்சம் பொருந்திய கோயில் கட்டடங்களைக் கட்டுபவர்கள், நவீன உயரிய பல மாடமாளிகையான பல அடுக்கு கட்டடங்களை அமைக்கும் கலைஞர்களும் இந்த வகையில் அடங்குவர். இவர்கள் தட்சிணாயனம், தேய்பிறை இவர்களில் பிறந்தவர்கள் பெரும்பாலும் நாத்திகர்களாகவும், விஞ்ஞானம் வானசாஸ்திரம்,

அணுவிஞ்ஞானம் இவைகளில் ஈடுபட்டவர்களாகவும் இருப்பார்கள்.

இவர்களின் நோய்கள்:

இந்த ஐந்தாம் எண்ணில் பிறந்தவர்களுக்கு மனக் குழப்பம், மனச்சிக்கல், இவர்களின் கருத்துக்கு முரண் பாடும் எதிர்ப்பும் உண்டாகும். சிலர் குடும்பத்தை, மனைவியை பகைத்து தனித்து வாழ்வர். மனைவிக்கும் தனக்கும் அதிக கருத்து வேறுபாடுகள், ஒற்றுமைக் குறைவு, உடல் பலவீனம் இவைகள் இருந்துகொண்டே இருக்கும். இவர்களுக்கு நரம்புத்தளர்ச்சி, பார்வைக் கோளாறு, காதுநோய், செவிட்டுப் பிரச்சினை, வயிற்று தொந்தரவுகள், பயம், வாத ரோகங்கள், பீனிச ரோகங் களால் சிரோவியாதிகள், எலும்பைப் பற்றிய நோய்கள், கல்லீரல் மண்ணீரல் நோய்கள் இவர்களைப் பாதிக்கும், பெரும்பாலும் இவர்களுக்கு மானசரோகமான மனோ வியாதிகளால்தான் உடம்பு வியாதிகள் உண்டாகும்.

இவர்கள் தங்கபஸ்கம், வெள்ளி பஸ்பம், இரச செந் தூரம், அயச்செந்தூரம், பவளபஸ்பம், சிருங்கிபஸ்பம் முதலானவைகளை தேக திடமறிந்து தக்க அனுமானத்தில் சாப்பிட்டுவர நீண்டகாலம் ஆரோக்கியமாக இருக்கலாம்.

இவர்கள் பௌர்ணமி நாளை விரத தினமாக விசேஷ மாக கடைப்பிடித்து வரலாம். பொதுவாக இந்த எண்ணில் பிறந்த பெண்மணிகள் பௌர்ணமி தினத்தை விசேஷ தினமாக பாவித்து வரலாம். பௌர்ணமி காலையில் இருந்து பால் பழம் சாப்பிட்டு தங்கள் மனக்கோரிக்கைகளை இஷ்ட தெய்வத்திடம் சமர்ப்பித்து பௌர்ணமி நிலவின் உதயத்தைப் பார்த்து— வீட்டில் விளக்கேற்றி வைத்து இறை வழிபாடு முடித்து உணவருந்தலாம். இப்படி குறைந்தது

பத்து பௌர்ணமி விரதம் கடைப்பிடித்து வந்தால் இவர்களுடைய மனக்கோரிக்கைகள் நிறைவேறும்.

இந்த எண்ணில் பிறந்த பெண்மணிகளின் ஆசை அபிலாஷை திட்டங்கள் உயர்ந்ததாக இருக்கும். இந்த ஆசைகளும் திட்டங்களும் நிறைவேற முடியாத குடும்பக் குழப்பங்கள் இவர்களுக்கு உண்டு. இவர்களை புரிந்து கொள்ள முடியாதவர்களிடம் அகப்பட்டுத் தவிப்பர். சாதாரண குடும்பத்தில் பிறந்தவர், உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர், சந்தர்ப்பவசத்தால் தாழ்ந்த குடும்பத்தில் வாழ்க்கைப் படுதலும் உண்டு.

பொதுவாக ஐந்தாம் எண்ணில் பிறந்தவர்கள் தியாகிகள், கருணாமூர்த்திகள், விட்டுக் கொடுப்பார்கள். பிறரால் மெச்சப்பட்டு, பிறரது நினைவிலே நிலைத்து விடுவார்கள்.

இவர்கள் தங்கத்தில் வட்ட வடிவமான சின்னம் செய்து அதில் ஒரு (பிந்து) பீடம் வைத்து அதன் நடுவில்—நீலம், கருநீலம், புகை நிற உயர்ந்தரக கற்களைப் பதித்து விரலில் அணிந்து கொள்வது மிகவும் நல்லது. இவர்கள் சதாசிவம், மனோன்மணி இவர்களை வழிபாடு தெய்வமாகக் கொள்ளலாம்.

இவர்கள் யோசித்து தீர்மானிக்கும் காரியங்களில் வேகமாக உற்சாகத்துடன் முனைந்து ஈடுபட்டால் முன்னேற்றமும் புகழையும் பெறுவர். இவர்கள் ஏழைகளாக இருந்தாலும் ஊரும் உலகமும் மெச்சத் தகுந்த கீர்த்தியும் செல்வமும் பெறுவர். மனம் உற்சாகம் கெட்டுவிட்டால் இவர்கள் வாழ்வை தாழ்த்திக் கொள்வர். எதையும் யாரையும் பகைத்துக் கொள்வர்.

இனி இந்த எண்ணின் ஆளுகைக்குட்பட்ட சில பெயர்களையும், பெரியோர்களையும் ஆராய்வோம்.

மகாத்மா
1 1 2 1 — 5 ஆகாயம்

காந்தி
1 2 2 — 5 ஆகாயம்

மகாத்மா என்றாலும், காந்தி என்றாலும் ஆகாய பூதத்தின் ஆளுகைக்குட்பட்ட எண் ஆகிறது. ஆகவே மகாத்மாகாந்தி ஆகாய பூதத்தின் அம்சத்தைப் பெற்ற தினால் உலகம் முழுவதுமே அவரது புகழ் பரவியது. உலகத்தில் அவரைப்பற்றி எல்லோரும் அறிவார்கள். காந்திக்குப் பின்னால் காந்தியம் என்ற ஒரு புது தத்துவமே உருவானது.

ஆகாய பூதத்தின் கிரகம் சனி, ராகு ஆனதினால் சனி ஓயாது கஷ்டப்படுத்தி, போராட்டங்கள், வழக்குகள், எளியவாழ்வு, பிறருக்கு உழைத்தல், தீண்டாமை ஒழித்தல், போன்றவை காந்தியடிகளின் கொள்கையும் கடமையும் ஆகின. ராகு ஞானியாகவும், தீர்க்கதரிசியாகவும், மாய சக்தி நிறைந்தவராகவும், தன் சொல்லுக்கு கீழ் பலஆயிரம் பேரை அணி வகுத்து நிற்கச் செய்யும் சாதுரியத்தைப் பெற்றார். ஆகாய பூதத்திற்கு சனியும் ராகுவும் வந்த தினால் போகத்தை துறப்பது, துன்பங்களை அனுபவிப்பது, மதக் கோட்பாடுகளில் வாழ்வது ஆகியவைகள் காந்தியடிகள் வாழ்வில் முதன்மையாக்கப்பட்டு அவ ரால் கடைப்பிடிக்கப் பெற்றது. சனி கிரக ஆளுமை யினால் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவிலும், இந்தியாவிலும் அவர் பட்ட கஷ்ட நஷ்டங்களுக்கு அளவே கிடையாது. வாழ்நாளில் இவரது கொள்கைக்கு எதிர்ப்பும் ஏற்பட்டது. சனி ஆளும் கிரகமானதினால் பெரும் பங்கு சிறை தண்டனையும் அனுபவித்தார். இருந்தாலும் இறுதி வரையிலும் தனது கொள்கை களான கடவுள் நம்பிக்கை, அஹிம்சை, சத்தியம், இவை களை அவர் கைவிடவில்லை. ஆகவே இவரது 5ம்

என் ஆகாய பூதமானதினாலும் அதன் ஆளுகைக் கிரகம் சனி ராகு ஆனாதினாலும் வாழ்வில் உயரிய நிலையை அடைந்தார். அவரது புகழ் உலகம் அளாவி நிற்கிறது.

| | | |
|---|---|---|
| பா ர த ம் | | |
| 1 1 1 2 | 5 | ஆகாயம் |

பாரதம் என்ற பெயர் இந்தியாவினுடையது. பாரதம் என்ற பெயரில் அடங்கிய மகத்துவமும், பாரத கலாசாரமும், கலைகளும், பாரத நாட்டில் தோன்றிய மதம், ஆன்மீகம் இவை எல்லாம் மேலை நாட்டிற்கு வியப்பாகவும், ஆச்சரியமாகவும் தோன்றுகிறது. உலக நாடுகளில் பாரதத்திற்கு தனிச்சிறப்பு உண்டு. எத்தனையோ வெளிநாட்டினர் வந்து பாரதத்தின் செல்வம், கலை இவைகளை கொள்ளையடித்துச் சென்றனர். இருந்தாலும் பாரதம் நிலைகுலையாது நிலைத்து நிற்கிறது.

சனி கிரகமும், ராகு கிரகமும், ஆகாயபூதத்தின் ஆட்சிக்கிரகங்களானதால் இன்னும் பாரதத்தில் வறுமை, எளிமை, கீழ்மை, இவைகள் நிரந்தரமாக இருக்கிறது. பாரதமக்கள் ஓயாத பாட்டாளிகள், உழைப்பாளிகள். தியாகசீலர்கள், விட்டுக் கொடுக்கும் மனத்தினால் வெளியிலிருந்து தான் தீமைகள் பாரதத்தில் வந்து புகுந்தது.

| | | |
|---|---|---|
| ஆ தி ச ங் க ர ர் | — | 5) 10 (1 |
| 1 2 1 2 1 1 2 | | 5 |
| | | ——— |
| | | 5 ஆகாயம். |
| | | ——— |

ஆதிசங்கரர் — இந்த பெயர் ஆகாயத்தில் அமைந்ததினால் இந்துமதத்தில் ஆதிசங்கரர் என்னும் பெயருக்கு உயரிய கௌரவம் கிடைத்தது. அவரை கடவுளின்

அவதாரம் என்றும், அவரது கருத்துக்களை வணங்கி மதித்து வருகிறோம். அவர் இந்துமதத்தின் பல குறை களைத் தவிர்க்க அதன் உட்பிரிவுகளாகிய சைவம், வைணவம், கௌமாரம், சாக்தம், சௌரம், காணபத்தியம் என்ற ஆறுசமய வழிபாடுகளைத் தோற்றுவித்தார். இந்தமதத்தை சீர்திருத்தி புதிய உற்சாகத்தை உண்டாக்கி சங்கரமடத்தை நிறுவி, பல தெய்வீக நூல்களை வடமொழியில் இயற்றித்தந்தார்.

| இ | ரா | ம | லி | ங் | க | அ | டி | க | ள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2 | 1 | 1 | 2 | 2 | 1 | 1 | 2 | 1 | 2 |

— 5) 15 (2
10
———
5 ஆகாயம்.

இராமலிங்க அடிகள் என்ற பெயர் ஆகாய பூதத்தின் அம்சம் ஆனாதினால் வள்ளலார் சென்ற நூற்றாண்டில் சிறந்த ஆன்ம தத்துவ யோகியாக விளங்கி மரணத்தை வென்று மரணமில்லா பெருவாழ்வைப் பெற்றார். யாருக்குமே கிடைக்க முடியாத சிவபுண்யம் அவருக்கு கிடைத்தது. அவரது திருஅருட்பா, திருமுறைகள் இன்னும் பக்தர்களுக்கு உயர்ந்த ஆன்மீக நூலாக திகழ்கிறது.

| ஜ | வ | ஹ | ர் | லா | ல் | நே | ரு |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | 1 | 2 | 1 | 2 | 4 | 3 |

— 5) 15 (2
10
———
5 ஆகாயம்.

ஜவஹர்லால் நேரு என்ற பெயர் ஆகாயபூதத்தில் அமைந்ததினால் இந்தப் பெயர் குழந்தைகள் முதல் எல்லா நாட்டு மக்கள் மனதிலும் பதிந்துள்ளது.

இவரிடத்தில் ஆகாயம் போன்ற உயர்ந்த எண்ணங்களும், மக்கள்மீதும், நாட்டின் மீதும் அளவற்ற பக்தி கொண்டிருந் தார். இந்தியாவில் விஞ்ஞான மறுமலர்ச்சிக்கும் ஐந் தாண்டுத்திட்ட வளர்ச்சிக்கும் வித்திட்டவர். இந்தியாவின் புகழ் திக்கெட்டும் பரவுவதற்கு ஜவஹர்லால்நேரு காரண மாவார்.

இவருக்கு சனி ராகு ஆட்சிக்கிரகங்கள் ஆனதினரல் மனைவியை இளமையில் இழந்ததும் சிறையில் பெரும் பாலான நாட்கள் இருந்ததும் இந்த உலகம் அறியும்.

பி ர் லா
2 2 1 — 5 ஆகாயம்

பிர்லா என்ற இந்தப் பெயர் இந்தியா முழுவதும் தெரியும். உலக நாடுகளிலும் தெரியும். இவர் இந்தியா வின் பொருளாதாரத்தில் மூன்றில் ஒரு பங்கை தன்னிடம் வைத்துள்ளவராகவும் இரும்பு எஃகு தொழிலில் இவர் இந்தியாவில் பிரசித்தி பெற்றவராகவும் விளங்கினார்.

பி லா ய்
2 1 2 — 5 ஆகாயம்.

ரூ ர் கே லா
3 2 4 1 — 5 ஆகாயம்

இந்த பெயர்கள் எல்லாம் 5ம் எண்ணில் அமைந்துள்ள தினால் சனி, ராகு இப்பூத எண்ணுக்குச் சம்பந்தப்பட்ட தினால் இந்நகரங்கள் புகழ்பெற்று விளங்குவது மட்டுமின்றி ஏராளமான இரும்புத் தொழில்களும், இரும்புச் சுரங்கங் களும் இந்த நகரத்தில்தான் இருக்கிறது. இந்தியாவின் இயந்திரத்தொழில் துறை முன்னேற்றத்திற்கு இந்த நகரங்களே மிகவும் முக்கியமானது என்று இந்தியாவில் பெயர் பெற்றிருக்கிறது.

புண் ணி ய ம் | — 5) 10 (1
3 2 2 1 2 |

5
——
5 ஆகாயம்
——

புண்ணியம் என்ற உயர்ந்த சொல் 5ம் எண்ணுக்குடையதாகும். ஆகவே 5ம் எண்ணும் அதன் கிரகங்களுமான சனி — ராகு இவர்கள் உயர்ந்த தத்துவத்தையும் வாழ்வில் மிக உயர்ந்த நிலையையும் குறிப்பிடுகின்றனர். இந்த எண்ணின் ஆளுகைக்கு உட்படுபவர்களும், புண்ணியம் செய்தவர்கள், மண்ணில் தங்களின் வானளாவிய புகழை நிலைநிறுத்திக் கொள்பவர்கள். ஆகவே 5ம் எண் என்பதும் ஆகாயம் என்பதும் மிக உயர்ந்த நிலையில் உள்ளது என்று பொருள். இறவாத இறை தன்மைக்கு இந்த ஐந்தாம் எண்ணே முக்கியமானது. இறைவனை அடைவதற்கு நமசிவாய என்னும் ஐந்து எழுத்து அடங்கிய பஞ்சாட்சர மந்திரம் எப்படியோ அப்படிப்பட்ட மகிமை உடையது இந்த ஐந்தாம் எண்.

சோ தி ட ம் | 5) 10 (2
5 2 1 2 | 10
——
0—5
——

ஜோ தி ட ம் | 5) 10 (2
5 2 1 2 | 10.
——
0—5
——

வா ன சா ஸ் தி ர ம் | 5) 10 (2
1 1 1 2 2 1 2 | 10
——
0—5
——

மீதி 0 வந்தால்-5ம் எண்ணையே வைத்துக்கொள்ள வேண்டும். சோதிடம் என்பது — உலகத்தில் அழியாத ஒரு தத்துவம் —வானசாஸ்திரம் என்றாலும் இதே 5ம் எண் தான்வரும். இது நம்பிக்கையற்றது என்று உலகமே எதிர்த்தாலும்—மக்கள் மனதில் சோதிடம் என்கிற எண்ணம் மறையாது உயர்வாக இருக்கும். சோதிடம் கற்றுக்கொடுக்க — கலாசாலைகள் இல்லா விட்டாலும் இந்த சாஸ்திரம் வளர்ந்து கொண்டே இருக்கிறது — பழமையானது என்றாலும் அது ஒரு புதுமையாகவே விளங்குகிறது.

5ம் எண்ணில் அமைந்த சோதிடம் உலகத்தில்-சோதித்து—திடத்தை அறிந்து அதன்படி நடப்பதாகும் என்பதை-உலகத்துக்கு உணர்த்தி நிற்கிறது.

ஆகவே இதுவரையில் தமிழ்முறை எண் கணிதத்திலே 5 எண்களைப் பற்றி சில விரிவான விளக்கங்களை எடுத்துக் காட்டினோம். தமிழ்முறை எண் கணிதப்படி 5க்கு மேல் எண்கள் இல்லை. எல்லா தோற்றங்களும், ஒடுக்கங்களும் இந்த ஐந்தில் அடங்கும். இந்த ஐந்து என்பது ஐந்து பூதங்கள். இந்த ஐந்து பூதங்களின் பஞ்சீகரண ஸ்தூல சூக்குமங்கள் எல்லாப் பொருள்களிலும் அடங்கிக் கிடக்கிறது. இது கலப்பு நட்சத்திரங்களிலும் கிரகங்களிலும், ராசிகளிலும், அண்ட பிண்டங்களிலும் எங்கும் வியாபித்து ஆட்சி செய்யப்படுகிறது. இதன் பௌதீக பூத கலப்புக்களை பகுத்து உணர்ந்து கொண்

டால், எதையும் எளிதில் விளங்கி உணர்ந்து ஞானி யாகவே மாறி முக்காலங்களையும் சொல்லும் ஆற்றலைப் பெறமுடியும். இது அல்லாத வேறு கணிதங்கள் பொய் யாகி விடுகிறது. வீண் அபிப்பிராயங்களாகவும் சர்ச்சை யாகவும் விரிகிறது.

ஆகவே உங்களை எந்தப் பெயரில் உலகத்திற்குத் தெரியுமோ—அந்தப் பெயரைக் கொண்டு அதன் உச்சரிப்பைக் கொண்டு ஒரு எண்ணை நிர்ணயித்து-அந்த எண்ணின் பூத குணத்தை நடை முறைப்படுத்தி வாழ்வில் வெற்றியடையுங்கள்.

## கிரகங்களுக்கு தாது ரசம்

சூரியன் — எலும்பு, சந்திரன் — இரத்தம்
செவ்வாய் — எலும்பில் இருக்கும் மூளை
புதன் — தோல், குரு — தசை, மாமிசம்
சுக்கிரன் — இந்திரியம், சனி — நரம்பு, தசை.

## மருந்துண்ணும் காலம்

1. ''காரி புதன் திங்கள் கருத மருந்தாகாது
பாரினில் சுங்கன் பரிகாரம் — நேரன்று
தேர குரு சேயுந்தான் தீதில்லை என்றும்
பேரருக்கன் நன்றெனவே பேசு''.

—கண்ணுசாமியல்

2. ''நோய்க் கவுழ்த்து முன்னில் ரவி குரு குசறும்
வாய்க்கும்படி ஏற்றும் நாள்''.

3. ''நைவினையோருக்கு நாளென்பதில்லை''.

என்ற எடுத்துக்காட்டுகளினால் சனி, புதன், திங்கள் இம்மூன்று தினங்களிலும் மருந்துண்ண ஆரம்பிக்கலாகாது.

வெள்ளிக்கிழமை மருந்து சாப்பிட எண்ணின் பிணி மிகுதிப்படும் எனவும், ஞாயிற்றுக்கிழமை எல்லாவற்றிற்கும் மேலான சிறந்த நாளென்றும் அறிகிறோம்.

ஞாயிறு, செவ்வாய், வியாழன் இம்மூன்று தினங்களும் மருந்து சாப்பிட ஆரம்பிக்கப்பொருத்தமான நாள்களாயினும், நோயின் நிலைமை அறிந்து அவசியத்தையும் அவசரத்தையும் கவனித்து நாள் பொருத்தம் பாராது கொடுக்கலாம்.

**நோய் நீங்க தலைவைத்துப் படுக்கும் திசைகள்:**

வடக்கு — நோய் மிகும், உயிருக்கு வாதை ஏற்படும்.
தெற்கு — ஆயுள் விருத்தி
மேற்கு — மத்தியமம்.
கிழக்கு — உத்தமம்

**வைத்தியம் செய்வதற்கு ஏற்கும் திதிகள்:**

ஏகாதசி, நவமி, இவை நீங்கலாக எல்லாத்திதிகளும் ஏற்கும்.

அசுவனி, ரேவதி, ஆயில்யம் — இவை நீங்கலாக எல்லா நட்சத்திரங்களும் ஏற்புடையது.

ராசிகள்:

கன்னிராசி, மிதுன ராசி, தனுசு ராசி நீங்கலாக மற்ற ராசிகள் எல்லாம் ஏற்கும்.

கிரகங்களின் சுவை: சூரியன், — காரம், சந்திரன் — உப்பு, செவ்வாய் — கசப்பு, புதன் — பலசுவை, குரு — இனிப்பு, சுக்கிரன் — புளிப்பு, சனி—துவர்ப்பு

ஜன்ம ராசிக்கு 1, 2, 4, 5, 7, 8, 9, 12 — இவைகள் அனுபசுயராசி, அபச்யராசி என்று பெயர் — இந்த ராசிகளில் சந்திரர் இருக்கும்போது கர்ப்பம் தரிக்கும்.

சந்திரன் 3, 6, 10, 11ம் ராசிகளில் இருந்து (உபசுய ராசி) ஆண் சுபகிரகம் பார்த்தால் ஒரு ஸ்திரீ தன்னுடைய கணவனுடன் சம்போகம் செய்வாள் என்பது:

ஆண் சுபகிரகம் — என்பது குரு

| | |
|---|---|
| ம் லக்கினம் —சிரசு | 7ம் வீடு—அடிவயிறு |
| 2ஆம் வீடு —முகம் | 8ம் வீடு—சிசுனம் |
| 3ம் வீடு —மார்பு | 9ம் வீடு—இரண்டு தொடைகள் |
| 4ம் வீடு —இருதயம் | 10ம் வீடு—இரண்டு முழுங்கால்கள் |
| 5ம் வீடு —வயது | 11ம் வீடு—இரண்டு கணுக்கால்கள் |
| 6ம் வீடு —தொப்புள் | 12ம் வீடு—இரண்டு பாதங்கள் |

சூரியன் — 1 மிகு சூடு உடைய சூரியனால் உஷ்ண வியாதிகளான ரத்த பித்தம், க்ஷயம், அம்மை, உஷ்ணக்கட்டிகள், கழலை, ரத்த அழுத்த நோய் (பிளட் பிரஷர்) கண் வியாதி பல் வியாதி போன்ற நோய்கள் வரும்.

சந்திரன் — 2 குளிர்ந்த ஈரமுடைய சந்திரனால் தோல், மயிர், நகம் இடது பிடரி, கால், இடது கண், ரத்தத்தில் குளிர்ச்சி இவைகள் தொடர்புள்ள நோய்கள் வரும்.

செவ்வாய்—3 மிகு சூடும் வறட்சியுமான செவ்வாயினால் பித்த சூடு, மாமிசம் பித்தப்பை, பீஜம், விரை, வலது நாசி, சுரம், காமாலை கருப்ப சின்னம், பீனிசம், பெரும்பாடு, மூலம், இவை பற்றிய நோய்கள் ஏற்படும்.

புதன்— 4 மிகு வறட்சியும், குளிர்ச்சி கலந்த வறட்சியும் ஈரம் கலந்த வண்டலுமான புதன் கிரகத்தால், நரம்பு பாரிசப்புலன், நாவு, கண், காது, மூக்கு, இவற்றின் குளிர்ச்சியும், வறட்சியும் பற்றிய நோய்கள் ஏற்படும்.

குரு — 5 சமமான சூடும் குளிர்ச்சியுமான குரு கிரகத்தினால்— தூயரத்தம், விந்து, மூளை, இரத்தத்தாரை, மஜ்ஜை, இரைப்பை, குடல், தொண்டை, மேலன்னம் இடது காது, ஒலிப்புலன் ஆகியன பற்றிய நோய்கள் ஏற்படும்

சுக்கிரன்—6 சமமான குளிர்ச்சியும், ஈரமான சுக்கிரனால் இரச தாது, நிணம், விந்து, கருப்பை, ஆண்குறி, நாசித்துளை, நீர்த்தாரை, சிறிது கொழுமை, அற்ப குளிர்ச்சி இவை பற்றிய நோய்கள் வரும்.

சனி—7 மிகு குளிர்ச்சியும், வறட்சி வண்டலுமான சனியினால்—வலது செவித்தோல், குறும்பி, மயிர், நகம், மண்ணீரல், மலநீர், கால்விரல் இசிவு — உள்ளுறுப்புக்கள், இவைபற்றிய நோய்கள் வரும்.

நவதானியம்:

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | — | கோதுமை |
| சந்திரனுக்கு | — | நெல் |
| செவ்வாய்க்கு | — | துவரை |
| புதனுக்கு | — | பாசிப்பயிறு |
| குருவுக்கு | — | கடலை |
| சுக்கிரனுக்கு | — | கருப்பு மொச்சை |
| சனிக்கு | — | எள் |
| ராகுவுக்கு | — | உளுந்து |
| கேதுவுக்கு | — | கொள்ளு |



இந்த ஐங்கோணச் சக்கரத்தை சுயத்தங்கம். பஞ்ச லோகம் இவற்றில் தகடு செய்து அதில் அமைத்து, ஐந்து கோணங்களில் பஞ்சபூத பீஜ அச்சரங்களை அமைத்து வழிபட்டால் பஞ்சபூதங்களால் நமது விருப்பங்கள் நிறை வேறும். இதே ஐங்கோணத்தில் பஞ்சமூர்த்திகளின் பீஜ அட்சரங்களை அமைத்து வழிபட்டால் சதாசிவனின் அருள் கிட்டும்.

இந்த ஐங்கோண சக்கரத்தை பழைய காலங்களில் சித்தர்கள் தங்கள் ரதவாதம், மாந்திரீகம், அஷ்டகர்மம், ஆலயங்களில் மூர்த்திபிரதிஷ்டை ஆகியவைகளுக்கு பயன் படுத்தி வந்தார்கள். ஆகவே, இந்த ஐந்து கோணத்தில் மனித சரீர அமைப்புள்ளது. மேல் கோணம் தலை என்றும் இருபுறக் கோணங்கள் இரு கைகள் என்றும் கீழ் இரு கோணங்கள் இரு கால்கள் என்றும் உணர்த்தும். இதில் நிறைய ரகசியங்கள் இருப்பதால் இதன் தத்துவத்தை குருவருளால் தெரிந்து கொள்ளலாம். மேலும் சித்தர்கள் ஒவ்வொரு பூதத்திற்கும், பீஜம், அச்சரம், மூலிகை, மந்திரம், ரக்ஷை என்றெல்லாம் கூறியிருக்கிறார்கள். ஆகவே ஒவ்வொருவரும் தங்களுக்கு உரிய கிரகங்களின். பீஜ அட்சர சக்கரங்களோ அல்லது மூலிகை ரக்ஷை களோ விசேஷமாகச் செய்து அணிந்து கொள்ள காரிய சித்தி கிட்டும் என்று அவர்கள் நூலில் காணப்பெறுகிறது.

இன்னும் சித்தர்கள் ஐந்து பூதங்களையும் ஐந்து பட்சிகளாக்கி பஞ்சபட்சி தந்திரங்களையும் கூறி இருக்கிறார்கள் அதில் ஒரு தத்துவம் விளக்கப்படுகிறது.

காகத்தெழுத்தாற் கடிதாந்தையைக் கட்டி
வாகுற்ற கோழிவழி மறித்துப்—பாகுற்ற
வல்லூரைத் தொட்டு வருமயிலைப் பூசிப்பார்
எல்லோரும் ஈடேறுவார்.

இது தகுந்த குருவின் விளக்கத்தால் சித்திக்கட்டும்.

ஆகாயம்




5 ய சதாசிவம் அருளல்
மனோன்மணி

காற்று




4 வ மகேஸ் மறைத்தல்
-வரன்
மகேஸ்வரி

தீ




3 சி உருத்திரன் அழித்தல்
பார்வதி

நீர்




2 ம விஷ்ணு காத்தல்
லட்சுமி

மண்




1 ந பிரம்மா படைத்தல்
சரஸ்வதி

மேற்கு

எ

தெற்கு உ | அ | ஒ வடக்கு

இ

கிழக்கு

தமிழ் முறைப்படி

ஆங்கில எழுத்துக்களின் மதிப்பு

| | |
|---|---|
| Y I | 1 |
| B C D E<br>F G H L N M P R<br>S T V X Z | 2 |
| Q U W | 3 |
| A J K | 4 |
| O | 5 |



□ □ □

# இந்நூல் ஆசிரியரைப்பற்றி....

எங்களது ஞானகுரு, சித்தவைத்திய மேதை, ஆன்ம தத்துவ யோகி, ஜோதிட நிபுணர், மதிப்பிற்கும் பெருமரியாதைக்கும் உரிய அனுப்பபட்டி ப. சு. மணியன் அவர்கள் கடந்த 20 ஆண்டுகளாக சித்தர் தத்துவங்களை ஆராய்ந்து மக்களுக்கு பயன்படும் வகையில் ஆன்ம தத்துவம், ஜோதிடம், வைத்தியம், மூலிகை, எண் கணிதம், மனையடி சாஸ்திரம், இவைகளை விளக்கும் வகையில் வல்லுனராக விளங்குகிறார்.

கோவை வானொலி மூலம், இவரின் தமிழ் இலக்கிய சேவையைப் பாராட்டி மத்திய அரசு ரூ. 3000 தமிழறிஞர்களுக்கான சன்மானத் தொகையை இவருக்கு கொடுத்து கௌரவித்து இருக்கிறது.

உறங்கிக் கிடக்கின்ற இந்த சமுதாயத்தை இவருடைய நாவன்மையாலும், அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டிருக்கும் சித்தர் தத்துவ்த்தின் மூலமும் மக்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படச் செய்து வருகிறார். இவர் மூலம் உங்களைப் பற்றி அறிந்து, வாழ்க்கையை செம்மையாக்கிக் கொள்ளுங்கள்.

—விஷ்ணுப்ரேமி

Wrapper Printing: Om Vinayaga Printers Madras-33.